உ

பரமபதி துணை.

பிங்கலமுனிவர்செய்த

பிங்கலந்தையென்னும்

# பிங்கல நிகண்டு.

இஃது

இன்ஸ்பெக்டிங் இஸ்கூல் மேஷ்டர் பென்சனர்

வீராட்சிமங்கலம்

தமிழ்ப்புலவர்

**தி - சிவன்பிள்ளை**

பல பிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து

இயற்றிய உரையோடும்,

கவர்னர்மெண்டு நார்மல் பாடசாலைத் தமிழ்ப்புலவராயிருந்த

சோடசாவதானம்

**தி - க. சுப்பராயசெட்டியார்**

முன்னிலையிலும் பரிசோதித்து,

**ஷை சிவன்பிள்ளையால்**

காஞ்சி-நாகலிங்கமுதலியாரது

சென்னை:

இந்து தியலாஜிகல் யந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது.

விகுர்தி௵ ஆவணி௴

இதன்விலை ரூபா - ௨. அணா - ௮.



1890.

உ

கணபதிதுணை.

# முகவுரை.

நிலவுலகில் தமிழில் இலக்கிய இலக்கணங் கற்கப்புகுவோர் முன்பு கற்க வேண்டுங் கருவிநூல் நிகண்டு என்பது கற்றோர் பலர்க்குந் துணிபே; நிகண்டுகளுள் சுருக்கமாகவும் விரிவாகவும் வழங்குவன சில, அவற்றுள் திவாகரமுனிவர் செய்த ஆதிதிவாகரம் விரிவா யளவின்றிப் பரந்து கிடத்தலின் அவர் புத்திரர் பிங்கலமுனிவர் வரையறுத்து விரித்துச்செய்த பிங்கல நிகண்டு சங்கமருவியதும், ஏனைநிகண்டுகளிலுள்ள பதங்களும் அவைகளுக்கு மேற்பட்டபதங்களும் பலநூல்களாலுமுணரப்படும் பொருள்களடங்கியதுமாயுள்ளது; இதுகாறும் எட்டுப்பிரதிரூபமாய்க் கற்றோர்பால் அருகி வழங்கிவந்தமையால் இது உபயோகமாய்ப் பலர்க்கும் பயன்படப் பல பிரதிகளைப் பலநாளும் வருந்தித்தேடிப் பல இடங்களினின்றும் பெற்று ஆதிதிவாகரம், சயாகர முதலிய நிகண்டுகளையும் ஓர் பற்றுக்கோடாகக்கொண்டு வழுவறப் பரிசோதித்து அச்சிட்டிருக்கின்றேன்.

இப்பிங்கலம் நிலைபெற்றபின் ஆதிதிவாகரம், தொல்காப்பியம் நிலைபெற அகத்தியம் இறந்து சிற்சிலபகுதிகளருகிவழங்குதல்போல, இறந்து சிற்சில தொகுதி குறைந்தும், அவற்றுள் சிற்சில பகுதிகளின்றியும், சிற்சில இடங்களில் அருகி வழங்குகின்றது; இவ்விரண்டும் விரிந்தநூல் என்பதும் மற்றையவை சுருக்கநூல் என்பதும் "செங்கதிர்வரத்திற்றோன்றுந் திவாகரர்சிறப்பின்மிக்க, பிங்கலருணாநூற்பாவிற் பேணினர்செய்தார்சேர, இங்கிவையிரண்டுங் கற்க எளிதலவென்றுசூழ்ந்து" எனவரும் மண்டலபுருடன் நிகண்டாலும், ஆதிதிவாகரம் இறப்பப் பிங்கலம் நிலைபெற்றுளது என்பது "பிங்கலமுதலாநல்லோருரிச்சொலி னயந்தனர்கொளலே" எனவரும் நன்னூலாலும் உணர்க. இடையில் சேந்தன் திவாகரம் என ஒரு நிகண்டு தோன்றினமையால் ஆதிதிவாகரம் என முதனூலுக்குக் காரணம்பற்றிவந்த பெயர்; இதனை "முன்னுள திவாகரம்பிங்கலநிகண்டுசீர் மூந்துகாங்கெயனுரிச்சொல்" எனவரும் ஆசிரிய நிகண்டிற் காண்க. இந்நூல் தொல்காப்பியம் வழங்கியகாலத்து வழங்கிவந்ததென்பதும் நன்னூல்முதலியநூல் இதற்குப்பிற்பட்டுவந்ததென்பதும் இந்நூலாலும் நன்னூலாலும் உணர்க.

| | ரூபா. | அணா. | பை. |
|---|---|---|---|
| பிங்கல நிகண்டு உரையோடு | 2 | 8 | 0 |
| உரிச்சொல் நிகண்டு உரையோடு | 0 | 8 | 0 |
| தபாற்செலவு | 0 | 3 | 0 |
| ,, | 0 | 1 | 0 |

இவை வேண்டியவர்கள் என்னிடத்திலும் என்மருகர் வீராட்சிமங்கலம் தி - கந்தசாமிப்பிள்ளை யிடத்திலும் சென்னை எழுமூர் நார்மல் பாடசாலைத் தமிழ்ப்புலவராயிருந்த தி. க - சுப்பராயசெட்டியா ரிடத்திலும் பெற்றுக் கொள்ளலாம்.

## இனிப்பதிப்பிக்கப் படுபவை.

யாப்பருங்கலவிருத்தி.
இசைமரபு.
பரதசூடாமணி.
இசைநுணுக்கம்.
பன்னிருபடலம்.
வளையாபதி.

பன்னிருபாட்டியல்.
கவிசாகரம்.
பிரபந்ததீபம்.
தொல்காப்பியம் சொல்லதிகாரம் கல்லாடர்செய்த வுரையோடு.
இரேவணாராத்திரியர் சூத்திரவகராதி.

இங்ஙனம்,
தமிழ்ப்புலவர்

விகுர்திவூ }
ஆவணிமீ }

வீ. தி - சிவன்பிள்ளை.
இன்ஸ்பெக்டிங் ஸ்கூல்மேஸ்டர் பென்சனர்
பொள்ளாட்சி, கோயமுத்தூர்.



உ

கணபதிதுணை.

பிங்கலந்தையென்னும்

# பிங்கல நிகண்டு.

தன்றோணன்கினென்றுகைம்மிகூஉங்
களிறுவளர்பெருங்காடாயினும்
ஒளிபெரிதுசிறந்தன்றளியவென்னெஞ்சே

## சிறப்புப்பாயிரம்.

இருங்கட லுடுத்தவிம் மாநிலம் விளங்க - வரும்பொரு டெரித்த வகன்றமிழ் வரைப்பி - னியற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொலென் - றனைத்தே செய்யுட் கணிகல னதனிற் - செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித் - தம்பொருள் வழாமை யிசைக்கு மியற்சொ - லொருபொருள் குறித்த வேறுசொல் லாகியும் - வேறுபொருள் குறித்த வொருசொல் லாகியு-மிருபாற் றென்ப திரிசொற் கிளவி- செந்தமிழ் சேர்ந்த திசைதொறுந் திசைதொறுந் - தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி - வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ - யெழுத்தொடு புணர்ந்த சொற்றா குந் - சிதைந்தன வரினு மியைந்தன வரையா - ரந்நாற் சொற்றிற மிறப முழுதுஞ் - செங்கதிர் வரத் தாற் றிவாகரன் பயந்த - பிங்கலமுனிவ னெனத் தன்பெயர் நிறீஇ - யுரிச்சொற் கிளவி விரிக்குங் காலை - யிருப்புட னிலைஇய வீறுசால் சிறப்பின் - வாஅன் வகையும் வானவர் வகையும் - வானினு மண்ணினும் வழங்கல் வழாஅ - வின மிலைய ரியல்புளி வகையு - மவனி வகையு மாடவர் வகையு - மவர்திறத் தமைந்த வனுபோக வகையு - மவையவத் தடைத்த வாறு மியல்பிற் - பண்பிற் செயலிற் பகுதி வகையு - மாப்பெயர் வகையு மரப்பெயர் வகையு - மொருசொற் பல்பொரு ளோங்கிய வகையுமென் - றிருளற வீரைந் தாக்கி - மருளற வகுத்தனன் மதியினின் விளக்கே.

இ - ள். இருங்கடல் உடுத்த இமாநிலம்விளங்க அரும்பொருள்தெரித்த அகன் தமிழ்வரைப்பு இன் - மிக்ககடல் நீர் புடைசூழ்ந்த இந்தப் பெரிய நிலவுலகு விளங்கப்பெறுதற்கரிய அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கு பொருள்களையும் ஆன்மாக்களுக்குப் புலப்படுத்திய இடம் (பரந்த) தமிழ்வழங்கு மெல்லையின்கண், இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்ற அனைத்து ஏ உரிச்சொற்கிளவி - இயற்சொலென்றுந் திரிசொல்லென்றும் திசைச்சொல்லென்றும் வடசொலென்றுஞ் சொல்லப்பட்ட அவ்வளவினதேயுரிச்சொல், செய்யுட்கு அணிகலன் ஆதலின் - அது புலவரால் தொடுக்கப்படுஞ் செய்யுளுக்கு ஓரணிகலமாதலால், செந்தமிழ் நிலத்துவழக்கு ஒடு சிவணிதம் பொருள் வழாமல் இசைக்கும் இயற்சொல் - உரிச்சொல்லின் பாகுபாடாய்ச் செந்தமிழ் நிலத்தில்வழங்கும் வழக்காதற்குப்பொருந்திக் கொடுந்தமிழ் நிலத்துந்தம்பொருள்வழுவாமலுணர்த்து மியற்சொல்லும், ஒருபொருள்குறித்த வேறுசொல் ஆகியும் வேறுபொருள்குறித்த ஒருசொல் ஆகியும் இருபாற்று என்பதிரிசொல்கிளவி - ஒருபொருளைக்கருதிய வேறு பெயர்ப்பலசொல்லும் பல பொருளைக்கருதிய ஒருசொல்லு மாயிருவகைப்படுந் திரிசொல்லும், செந்தமிழ்சேர்ந்த திசைதொறும் தம்குறிப்பின திசைச்சொல்கிளவி - செந்தமிழ் நிலத்தைச்சேர்ந்த பன்னிரண்டு நிலந்தோறும் தாங்குறித்த பொருளைவிளக்குந் திசைச்சொல்லும்; வடவெழுத்துஒருவிஎழுத்து ஒடுபுணர்ந்தசொல் தானும் சிதைந்தனவரின் உம்இயைந்தனவாயார் வடசொல்கிளவி - வடசொல்லுக்கே யுரியவெனப்படுஞ் சிறப்பெழுத்தினீங்கி யிருவகைப்படுமொழிகளுக்கும் பொதுவாகிய எழுத்தாலியன்றசொல்லும் வடவெழுத்தாலியன்ற வடசொல் சிதைந்துவந்தாலும் செய்யுளிடத்துப் பொருத்தமுடையனவென்று களையாது புலவர்கொள்ளுஞ் சொல்லுமாகிய வடசொல்லுமென்ற, அநாற் சொல்திறம் அரில்தபமுழுதும் - அந்த நான்குசொற்களின் பாகுபாட்டிலுள்ள குற்றங்கள் நீங்க அச்சொற்கள்முற்றும் (அவ்வுரிச்சொல் ஆதலால்) செங்கதிர்வரத்தால் திவாகரன் பயந்தபிங்கலமுனிவன் என்னதன்பெயர் நிறுவி விருப்புடன் விரிக்கும் காலை-சூரியன்வரத்தால்வந்த திவாகரமுனிவர்பெற்ற பிங்கலமுனிவனானவன் பிங்கலம் என்றுதன்பெயரைத் தன்னூலுக்குத்தந்து மக்களிடத்து அன்புகூர்ந்து நூல்செய்யுங்காலத்தில், நிலைஇய வீறுசால் சிறப்பின் வான்வகையும் வானவர்வகையும் வானினும் மண்ணினும் வழாதஈனம் இல்ஐயர் இயல்புளி வகையும் - நிலைபெற்ற பெருமை மிக்கசிறப்பினை யுடையவான்வகையும் வானவர்வகையும் வானுலகிலும் நிலவுலகிலும் தத்தநெறியினின்று வழுவாதகுற்றத்தினின்று நீங்கிய ஐயர்வகையும், அவனிவகையும் ஆடவர்வகையும் அவர்திறத்துஅமைந்த அனுபோகவகையும் அவயவத்து அடைத்த ஆனாத இயல்பின் பண்பின்செயலின் பகுதிவகையும் மாப்பெயர்வகையும் மரப்பெயர்வகையும் ஒருசொற்பல்பொருள் ஓங்குவகையும் என்று இருள் அற ஈரைந்து ஆக்கி-அவனிவகையும் ஆடவர்வகையும் அவ்வாடவர்பாகுபாட்டிலமைந்த அனுபோகவகையும் தனதகத்து உள்ள நல்வகையும் முதலிய உறுப்புகளாகச் செறித்தலி

னின்று நீங்காதஇயல்பினையுடைய பண்பிற்செயலிற் பகுதிவகையும் மாப்பெயர்வகையும் மரப்பெயர்வகையும் ஒருசொற்பல்பொருள்வகையுமென்று ஐயமறப்பத்து வகைகளாகப்பகுத்து அமைத்து, மதியினின்விளக்குமருள்அறவகுத்தனன்-தனது நுண்ணறிவால் விளக்கு ஆராய்வோர்க்குத் திரிபற இந்நூலை வகுத்தமைத்தனன் என்க.

உலகுபுறப்பாட்டெல்லையாதலால் இம்மாநிலம் எனவும், ஆன்மாக்களடைதற்குரியபொருள்கள் அறமுதலியபொருள்கள் ஆதலால்அரும்பொருள் எனவும், கிழக்கேகடலும் தெற்கே குமரி யாறும் மேற்கேகுடகநாடும் வடக்கேதிருவேங்கடமுமாகிய இந்நான்கும் தமிழ் வழங்குதற்குரிய அகப்பாட்டெல்லைகளாதலால் தொகுத்துத் தமிழ்வரைப்பின்எனவும், இயற்சொல்முதலியநான்கும் செய்யுட்கு உரிமைபூண்டு நிற்றலால் உரிச்சொல் கிளவியெனவும், செய்யுளீட்டுதற்குரியசொல் அதுவாதலால் அனைத்தே செய்யுட் கணிகலனாதலின் எனவும், வைகை யாற்றின் வடக்கும் மருதயாற்றின் றெற்கும் கருவூரின் மேற்கும் தமிழ்வழங்கும் நிலங்களாதலால் செந்தமிழ்நிலத்து எனவும், கொடுந்தமிழ் நிலத்துஞ் சென்று தத்தம் பொருள்களை அந்நிலத்திலுள்ளோர்க்கு வழுவாதுணர்த்துதலால் தம்பொருள் வழாமை யிசைக்குமெனவும், திரிசொற்போலாது கற்றோர்க்கன்றி யேனையோர்க்கும் பொருள் விளங்கிநிற்றலால் இயற்சொல்லெனவும், ஒருபொருள் கருதியும் வேறுபொருள்கருதியும்வருந் திரிசொல், கிளி-கிள்ளை, மயில் மஞ்ஞையெனத்திரியும் உறுப்புத்திரிபும், மலை-விண்டு, விலங்கல் எனத்திரியும் முழுதுந்திரிபும்என இருவகைப் படுதலால் இவற்றைத் திரிசொற்கிளவியெனவும், கொடுந்தமிழ்வழங்கும் நிலம் செந்தமிழ்வழங்கும் நிலத்தைச்சேர்ந்ததாதலால் செந்தமிழ்சேர்ந்த எனவும், கொடுந்தமிழ்வழங்கு நிலங்கள் பொங்கர்நாடு, ஒளிநாடு, தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலைநாடு, அருவாநாடு, அருவாவடதலையெனப் பன்னிரண்டுவகைப் படுதலால் நிலந்தொறும் நிலந்தொறுமெனப் பன்மைப்பொருள்பட வடுக்கியும், எழுத்துஎன்றது ஆரியத்திற்குந் தமிழிற்கும் பொதுவெழுத்தெனவும், அது-மேரு, மணிமுதலிய போல்வனவும், என்பார் வடவெழுத்தொரீஇ - எழுத்தொடுபுணர்ந்த எனவும், வடசொற் சிதைந்துவருதலுமன்றிப் பாகதமாய்ச் சிதைந்துவருவனவும், உளவாதலால் சிதைந்தனவரினும் எனவும், பிங்கலனாற்செய்யப்பட்டது பிங்கலமாதலால் பிங்கலமுனிவனெனத் தன்பெயர் நிறீஇ எனவும், ஏனைப்பூதங்கள் தோன்ற நிலைபெறுதலால் நிலைஇய வீறுசால் சிறப்பின் எனவும், இவ்வகைகள் ஒன்றோடொன்றியை புடைமையில் இடைநிலைத்தீவகமாக இயல்புளியெனவும், முன்னுள்ளதிவாகரம் பாகுபாடில்லாமல் கற்போர்க்கு ஐயமுந்திரிபும் விளைத்தலால் இருளற, மருளற எனவும், எந்நிகண்டின்பொருளும் இந்நிகண்டினுட்பட வகுத்தமையால் மதியினின் வகுத்தனன் எனவுங்கூறினர்.

சிறப்புப்பாயிரம் - முற்றிற்று.

பரமபதிதுணை.

# பிங்கலநிகண்

முதலாவது

## வான்வகை.

க. சுவர்க்கத்தின்பெயர்—பொன்னுலகுந் துறக்கமும் புத்தே ளுலகும் விண்ணுலகு மேலே யுலகும் விசும்பு—மன்னுலகு நாகமுங் கற்பமும் வானுலகும் - வியனுலகுந் தானமு முவணையுஞ் சுவவுஞ் - சுரரிடமு முயர்நிலையுஞ் சுவர்க்கப்பெயரே.

உ. மேலேழுலகத்தின்பெயர்—*பூலோகம் புவலோகஞ் சுவர்க்கலோகம் மாலோகந் தவலோகம் பிரமலோகம் - சிவலோகமித் திறத்தமேலேழுலகே.

ங. மோக்கத்தின்பெயர்.—கேவலங் கைவலங் கதிசித்தி மோக்கம்.

ச. மற்றும் மோக்கத்தின்பெயர்.—அமுதம் பரஞ்சிவமுத்தியுமாகும்.

ரு. ஆகாயத்தின்பெயர்.—வேணி விசும்பு வெளியும் பரிடம் - வானங் கோவிண் மண்டில மாசினி - மீமா கங்கம் வியோமம் புட்கரம் - வான்ககன நாக மங்குல் குண்டல - மண்டமுலக மம்பரங்குழைகுடி - லந்தர மகல மாகாயப் பெயரே.

சு. வெளியின்பெயர்—வெடிவயல் வெள்ளிடை விடியலும் வெளியே.

எ. பகிரண்டத்தின்பெயர்—அண்டரண்டம் பகி ரண்ட மாகும்.

அ. அண்டகோளகையின்பெயர்—கூடங் கடாக மண்டகோ ளகைப் பெயர்.

கூ. அண்டமுகட்டின்பெயர்—மூதண்ட மண்ட முகட்டின் பெயரே.

க0. அண்டச்சுவரின்பெயர்—பித்திகை யண்டச் சுவரின்பெயரே.

கக. திக்கின்பெயர்—மாதிரந் திகைதிசை வம்பல் விசும்பே - யாசை புலமே யுலகுகோ காட்டை - யரிதமம்பரங்கருப மனைத்துந் திக்கே.

கஉ. எண்டிக்கின்பெயர்—கிழக்குத் தென்கிழக்குத் தெற்குத் தென்மேற்கு - மேற்கு வடமேற்கு வடக்கு வடகிழக்கென் - ருகத் திக்கெட்டாகு மென்ப.

கங. கிழக்கின்பெயர்—குணக்கே பூருவ மைந்திரம் பிராசி - கிழக்கின் பெயரோ கீழ்த்திசையு மாகும்.

கச. தெற்கின்பெயர்—அவாசி தக்கண மியாமினியந் தெக்குச் - சிவேதை தென்னிவை தெற்கென லாகும்.

கரு. மேற்கின்பெயர்—மேக்குப் பச்சிமங் குடக்கிவை மேற்கே.

கசு. மற்றும்மேற்கின்பெயர்—வாருணம் பிரத்தி யக்கு மதுவே.

கஎ. வடக்கின்பெயர்—உதக்கே யுதீசி யுத்தரம் பிங்கலம் - வடக்கின்பெயரோ மதி திசையு மாகும்.

---

* "பூலோகம் புவலோகம் சுவலோகம் மகாலோகம் - சனலோகந் தவலோகம் சத்தியலோகமென - இத்திறத்தனவா மேலேழுலகே" என்னும் பாடமும் உண்டு.

பரமபதிதுணை.

# பெயர்ப்பிரிவு.

முதலாவது

## வான்வகை.

க. சுவர்க்கத்தின்பெயர்—பொன்னுலகு, துறக்கம், புத்தேளுலகு, விண்ணுலகு, மேலையுலகு, விசும்பு, மன்னுலகு, நாகம், கற்பம், வானுலகு, வியனுலகு, தானம், உவணை, சுவவு, சுராிடம், உயர்நிலை. (கசு)

உ. மேலேழுலகத்தின்பெயர்—பூலோகம், புவலோகம், சுவர்க்கலோகம், மாலோகம், தவலோகம், பிரமலோகம், சிவலோகம். (எ)

ஙு. மோக்கத்தின்பெயர்—கேவலம், கைவலம், கதி, சித்தி. (ச)

ச. மற்றும் மோக்கத்தின்பெயர்—அமுதம், பரம், சிவம், முத்தி. ஆ (அ)

ரு. ஆகாயத்தின்பெயர்—வேணி, விசும்பு, வெளி, உம்பர், இடம், வாணம், கோ, விண், மண்டிலம், ஆசினி, மீ, மாகம், கம், வியோமம், புட்கரம், வான், ககனம், நாகம், மங்குல், குண்டலம், அண்டம், உலகம், அம்பரம், குழை, குடில், அந்தரம், அகலம். (உஎ)

சு. வெளியின்பெயர்—வெடி, வயல், வெள்ளிடை, விடியல். (ச)

எ. பகிரண்டத்தின்பெயர்—அண்டரண்டம். (க)

அ. அண்டகோளகையின்பெயர்—கூடம், கடாகம். (உ)

கூ. அண்டமுகட்டின்பெயர்—மூதண்டம். (க)

க0. அண்டச்சுவரின்பெயர்—பித்திகை. (க)

கக. திக்கின்பெயர்—மாதிரம், திகை, திசை, வம்பல், விசும்பு, ஆசை, புலம், உலகு, கோ, காட்டை, அரிதம், அம்பரம், கருபம். (கங)

கஉ. எண்டிக்கின்பெயர்—கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு. (அ)

கங. கிழக்கின்பெயர்—குணக்கு, பூருவம், ஐந்திரம், பிராசி, கீழ்த்திசை. (ரு)

கச. தெற்கின்பெயர்—அவாசி, தக்கணம், யாமினியம், தெக்கு, சிவேதை, தென். (சு)

கரு. மேற்கின்பெயர்—மேக்கு, பச்சிமம், குடக்கு. (ங)

கசு. மற்றுமேற்கின்பெயர்—வாருணம், பிரத்தியக்கு. ஆ (ரு)

கஎ. வடக்கின்பெயர்—உதக்கு, உதீசி, உத்தரம், பிங்கலம், மதிதிசை.

௧௮. திசைநாற்கோணத்தின்பெயர்-அந்தராளந்திசைநாற்கோணமாகும்.

௧௯. எண்டிசைப்பாலர்பெயர்—இந்திர னக்கினி யியம னிருதி - வருணன் வாயு குபேர னீசான - னென்றாகு மெண்டிசைப் பாலர் பெயரே.

௨0. எண்டிசையானைப்பெயர்—ஐராவதம் புண்டரீகம் வாமனங் குமுதமஞ்சனம் புட்பதந்தஞ் சார்வ பூமஞ் - சுப்பிரதீப மெண்டிசை யானைப் பெயரே.

௨௧. அட்டமாநாகப்பெயர்—அனந்தன் வாசுகி தக்கன் கார்க்கோடகன்-பதுமன் மகாபதுமன் சங்க பாலன் - குளிக னட்டமா நாகப் பெயரே.

௨௨. எண்டிசையோனிப்பெயர்—கொடிபுகை சிங்கநா யிடபங் கழுதை - யானை காக மிவை யெண்டிசை யோனி.

௨௩. காற்றின்பெயர்—அநிலம் வங்கூ ழரிபவ மானன் - சமீரணன் மருத்துச் சதாகதி சலனன் - வாடை வளியே மாருதம் வாயு - கோதை வாதங் கூதை வேற்றலங் - காலொலி பவன முயிர்கந்த வாகன் - பிரபஞ் சனன்மாபலனே பரிசன - ளுசுகன் கந்தவக னூதை காலிலி - விண்டு நீளை வந்து வலவை - கொண்டல் கோடை யென்றிவை காற்றே.

௨௪. மற்றுங்காற்றின்பெயர்—தீனு மானு நிழலியு முயிர்ப்பும் - கூதிரு மென்றே கூறற் பாற்றே.

௨௫. பனிக்காற்றின்பெயர்—கூதிரு மூதையுங் குளிர்பனிக் காற்றே.

௨௬. வடகாற்றின்பெயர்—வாடை வடந்தை வடகாற் றாகும்.

௨௭. மேல்காற்றின்பெயர்—கோடை மேல் காற்றே.

௨௮. கீழ்காற்றின்பெயர்—கொண்டல் கீழ்காற்றே.

௨௯. தென்றலின்பெயர்—மந்தா நிலமே மலயக்காலே—தென்கால் வசந்தன் றென்றிசைத்தென்றல்.

௩0. சுழல்காற்றின்பெயர்—சூறைவளியே சுழன்றெழுகாற்றே.

௩௧. மற்றுஞ்சுழல்காற்றின்பெயர்—சூறாவளிசாரிகையுஞ் சொல்லும்.

௩௨. தசவாயுவின்வகைப்பெயர்—பிராணன பான னுதானன் வியானன். சமான னுகன் கூர்மன் கிருகரன் - றேவதத்தன் றனஞ்சய னென்றா - வாயு வீரைந் தாகு மிவைதாம்.

கஅ திசை நாற்கோணத்தின்பெயர் — அந்தராளம். (க)

கக எண்டிசைப்பாலர் பெயர் — இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன். (அ)

உ0. எண்டிசை யானைப்பெயர் — ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம். (அ)

உக. அட்டமா நாகப்பெயர்—அனந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன். (அ)

உஉ. எண்டிசையோனிப்பெயர் — கொடி, புகை, சிங்கம், நாய், இடபம், கழுதை, காகம். (எ)

உங. காற்றின்பெயர்—அநிலம், வங்கூழ், அரி, பவமானன், சமீரணன், மருத்து, சதாகதி, சலனன், வாடை, வளி, மாருதம், வாயு, கோதை, வாதம், கூதை, வேற்றலம், கால், ஒலி, பவனம், உயிர், கந்தவாசன், பிரபஞ்சனன், மாபலன், பரிசனன், ஆசுகன், கந்தவாகன், ஊதை, காலிலி,விண்டு-நீளை-வந்து, உலவை, கொண்டல், கோடை. (௩ச)

உச. மற்றுங்காற்றின்பெயர்—நீல்,மால்,கிழலி;உயிர்ப்பு,கூதிர்.ஆ (௩௩)

உரு. பனிக்காற்றின்பெயர்—கூதிர், ஊதை, குளிர். (௩)

உசு. வடகாற்றின்பெயர்—வாடை, வடந்தை. (உ)

உஎ. மேல்காற்றின்பெயர்—கோடை. (க)

உஅ. கீழ்காற்றின்பெயர்—கொண்டல். (க)

உகூ. தென்றலின்பெயர்—மந்தாநிலம், மலயக்கால், தென்கால், வசந்தன். (ச)

௩0. சுழல்காற்றின்பெயர்.—சூறை, வளி. (உ)

௩க. மற்றும் சுழல்காற்றின்பெயர்— சூறாவளி, சாரிகை. (உ) ஆ (ச)

௩உ. தசவாயுவின் வகைப்பெயர்—பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன்; என்றுஎண்ணிடைச்சொல். (க0)

௩௩. பிராணனென்பது— இருதய மண்டலத் தியங்கும் பிராணன்.

௩௪. அபானனென்பது—உச்சத் தலத்திடைநிற்ப தபானன்.

௩௫. உதானனென்பது—நாபியி னின்றங் கோவாத துதானன்.

௩௬. வியானனென்பது—வியானனெங்கும் வியாபியா நிற்கும்.

௩௭. சமானனென்பது—கந்தரசக் குழியிற் சந்திடைச் சமானன்.

௩௮. நாகனென்பது—முடக்கலு நீட்டலுங் கிளப்பது நாகன்.

௩௯. கூர்மனென்பது—உரோமம் புளகித்திமைப்பது கூர்மன்.

௪0. கிருகரனென்பது— கிருகர னென்பது முகத்திடைக் கெழுமித், தும்மலுஞ் சினமும் வெம்மையும் விளைக்கும்.

௪௧. தேவதத்தனென்பது—ஓட்டமுமிளைப்பும்வியர்ப்புந் தேவதத்தன்

௪௨. தனஞ்சயனென்பது—ஒல்காவன்பி னல்லவர்கேண்மையி—னுயி ருடல் விடினுந் தானுடல் விடாஅ, தொக்க நின்றங் குடலினை வீக்கித், தலைகிழித்தகல்வது தனஞ்சய னாகும்.

௪௩. சத்தமருத்துக்களின் பெயர்— குணக்குந் தெற்குங் குடக்கும் வடக்கு—மேலுங் கீழும் பலயோனி யுயிரு,மாகுஞ் சத்த மருத்துப் பெயரே.

௪௪. நெருப்பின் பெயர்— அழலுதாசன னங்கி தேயு—தழல்வசு வுதக வன் றனஞ்சயன் றழலி—கனலி யெழுநா வனலி முளரி—யனலெரி யழலி கனலரி கருநெறி—சுசியொளி தபனன் சுடர்சிகி சோதி—தூமகேது வன்னி சுவலன்—பாவகன் சித்திர பானுவங் காரகன்—ஞெகிழிதீ யார னெருப்பின் பெயரே.

௪௫. வடவாக்கினியின்பெயர்—வடவை தீத்திரண் மடங்கலூ ழித்தீ— கடையன லுத்தரம் வடவாக் கினிப்பெயர்.

௪௬. விளக்கின் பெயர்—சுடருந் தீபமு மொளியும் விளக்கே.

௪௭. அனற்பொறியின் பெயர்— * புலிங்கம்பொறியனல்.

௪௮. அனற்றிரளின்பெயர்—. உற்கமனற்றிரள்.

௪௯. காட்டெரியின் பெயர்— தாவக்காட்டெரி வனாயனலு மாகும்.

* "ஞெகிழிபுலிங்கம் கங்கம் அனற்பொறி" எனவும் பாடமுண்டு.

௩௩. பிராணனென்பது—இருதயத்தியங்குவது.

௩௪. அபானனென்பது—* உச்சத்தலத்தில் நிற்பது.

௩௫. உதானனென்பது—நாபியினிலைபெற்றுநிற்பது.

௩௬. வியானனென்பது—சரீரமுழுதும்வியாபித்து நிற்பது.

௩௭. சமானனென்பது—கந்தரசக்குழியிற்சந்திடைநிற்பது.

௩௮. நாகனென்பது—முடக்கலு நீட்டலுங் † கிளக்கலுஞ்செய்விப்பது.

௩௯. கூர்மனென்பது—உரோமம்புளகித்து இமைப்பது.

௪௦. கிருகரனென்பது—முகத்திடைநின்று தும்மலுஞ்சினமும் வெம்

௪௧. தேவதத்தனென்பது—ஓட்டமுமிளைப்பும் வியர்த்தலும்விளைப்பது

௪௨. தனஞ்சயனென்பது—உயிர்களிடத்து நீங்காத அன்பினையுடைய நல்லவரோடு கொண்ட நட்பால் உயிர்போகினும் போகாதுடலினை நீக்கித் தலைகிழித்தகல்வது.

௪௩. சத்தமருத்துக்களின்பெயர்—கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, மேல், கீழ், பலயோனியுயிர். (௭)

௪௪. நெருப்பின்பெயர்—அழல், உதாசனன், அங்கி, தேயு, தழல், வசு, உதகவன், தனஞ்சயன், தழலி, கனலி, எழுநா, அனலி, முளரி, அனல், எரி, அழலி, கனல், அரி, கருநெறி, சுசி, ஒளி, தபனன், சுடர், சிகி, சோதி, தூமகேது, வன்னி, சுவலன், பாவகன், சித்திரபானு, அங்காரகன், ஞெகிழி, தீ, ஆரல். (௩௪)

௪௫. வடவாக்கினியின்பெயர்—வடவை, தீத்திரள், மடங்கல், ஊழித்தீ, கடையனல், உத்தரம். (௬)

௪௬. விளக்கின்பெயர், சுடர். தீபம், ஒளி. (௩)

௪௭. அனற்பொறியின்பெயர்—புலிங்கம். (௧)

௪௮. அனற்றிரளின்பெயர்—உற்கம், (௧)

௪௯. காட்டெரியின்பெயர்—தாவம், வரையனல். (௨)

---

* உச்சம் உச்சி.

† கிளக்கல் - பேசுதல்.

௫0. தீக்கடைகோலின்பெயர் —* அரணி ஞெலிகோல் ஞெகிழி தீக்கடைகோல்.

௫௧. புகையின்பெயர்—தூமமு மரியுந் தூபமுமாவியு, மாகும் பெயரே புகையென லாகும.

௫௨. நறும்புகையின்பெயர்—நறைநருப்வெடியே நறும்புகையாகும்.

௫௩. அக்கினிதேவன் பெயர்—சாத வேதாமைவா கனனே—தீபதி சித்திர பானு தனஞ்சயன்—றென்கீழ்த் திசையோன் றேயுவாயுசகன், பாவகனக்கினிப் பண்ணவன் பெயரே.

௫௪. அக்கினிதேவன் பாரியின்பெயர்—பாரி சுவாகா தேவி யாகும்.

௫௫. முத்தீயின் பெயர்—காருக பத்திய மாகவ னீயந், தக்கணாக்கினிய மிக்கமுத்தீயே.

௫௬. பஞ்சாக்கினியின் பெயர்—இராகம் வெகுளி காமஞ் சடமே, தீபனம் பஞ்சாக்கினியின் பெயரே.

௫௭. நீரின்பெயர்—ஆலமுஞ் சலமுமம்மு மறலும்—பாணியுமப்பும் பயமு முதகமும்—வயமு மயமும் வாரியும் விகடியும்—புனலுஞ்சலிலமும் புவனமு மளகமுஞ்—சீவனமும் பானீயமுஞ் சிந்துமாங்குசமும்—வருணமு மம்புமழையுங் கவந்தமுங்—கீலாலமு மேகமும் * மகிலமுமிதடியும்—நீரமுந் தோயமும் வாரும்பதமுங் - காரு மாரியுங் கமலமும் பயசுங்- கயமுஞ் சம்பரமுங் கம்மும் புடகரமுஞ்- சீதமும் வசியுங் கோவுங் காண்டமுங்- கனவிர தமுஞ்சீவனீயமு மலரு- நாரமு மமுதமுநீரெனலாகும்.

௫௮. மேகத்தின் பெயா—மாரியும்மழையு மஞ்சு மாசுங் - காரும் புயலுங் கனமுங் கொண்டலும், வானு † ந்தாராதரமுமையுஞ் சீதமுஞ், சீவதமுஞ் செல்லுங்குயினுஞ்சீ மூதமு, மெழிலியுங்கொண்மூவும்விலாவு முகிலும், விண்ணுங் கந்தரமுஞ் சலதரமும் விசும்பு - மங்குலு மிளையுமாலுமம்புதமும்-விண்டுவுமென்றிவை மேகப்பெயரே.

௫௯. மற்றுமேகத்தின்பெயர்—முதிரம் பயோதரம்கதம்பமெய்ப் பிரம்-அப்பிரமாயமு மப்பெயர்க் குரித்தே.

௬0. இடியேற்றின்பெயர்— ‡ வெடியொலியுருமுகோ விண்ணேறசனி, செல்லிகுளியிடியேறு மடங்கலு மாகும்.

---

* "வனமுந்தகடியும்" எனவும்.

† "வானும் நாரதமும்" எனவும்.

‡ "இருள் சதகோடி சென்மடங்கலுமிடியே" எனவும்பாடம்.

௫0. தீக்கடைகோலின்பெயர்—அரணி,ஞெலிகோல்,ஞெகிழி. (௩)

௫௧. புகையின்பெயர்—தூமம்,அரி,தூபம்,ஆவி. (௪)

௫௨. நறும்புகையின்பெயர்—நறை,குய்,வெடி. (௩)

௫௩. அக்கினிதேவன்பெயர்—சாதவேதா,மைவாகனன், தீபதி, சித்திர பானு,தனஞ்சயன்,தென்கீழ்த்திசையோன்,தேயு,வாயுசகன்,பாவகன். (௯)

௫௪. அக்கினிதேவன்பாரியின்பெயர்—சுவாகாதேவி. (௧)

௫௫. முத்தீயின்பெயர் — காருகபத்தியம், ஆகவனீயம், தக்கணாக்கி னியம். (௩)

௫௬. பஞ்சாக்கினியின்பெயர் — இராகம், வெகுளி, காமம், சடம், தீ பனம். (௫)

௫௭. நீரின்பெயர்—ஆலம்,சலம்,அம்,அறல்,பாணி,அப்பு, பயம், உதகம் வயம்,அயம், வாரி, விகடி, புனல், சலிலம், புவனம், அளகம், சீவனம், பானீ யம், சிந்து, ஆம், குசம், வருணம், அம்பு, மழை, கவந்தம், கீலாலம், மேகம், அகிலம், தடி, நீரம், தோயம், வார், பதம், கார், மாரி, கமலம், பயசு, கயம், சம்பரம், கம், புட்கரம், சீதம், வசி, கோ, காண்டம், கனவிரதம், சீவனீயம், அலர், நாரம், அமுது. (௫0)

௫௮. மேகத்தின்பெயர்—மாரி, மழை, மஞ்சு, மாசு, கார், புயல், கனம், கொண்டல், வான், தாராதரம், மை,சீதம், சீவதம்,செல், குயின், சீமூதம்,எழி லி, கொண்மூ, விளைவு, முகில், விண், கந்தரம், சலதரம், விசும்பு, மங்குல், ஈ, மால், அம்புதம், விண்டு, (உக)

௫௯. மற்றும் மேகத்தின்பெயர்—முதிரம், பயோதரம், கதம்பும், மெய் ப்பிரம், அப்பிரம், ஆயம். (௬) ஆக (௩௫)

௬0. இடியின்பெயர் — வெடி, ஒலி, உரும், கோ, விண்ணேறு, அச னி, செல், இகுளி, மடங்கல். (௯)

௬௧. மின்னலின்பெயர் — சம்பையித்துருசபலை தடித்துச் — சஞ்சலை கனருசி தடியொளி மின்னல்.

௬௨. மழையின் பெயர்—மாரி வானம் வருடமழையெனல்.

௬௩. பெருமழையின்பெயர்—ஆசாரம் பெருமழையாகு மென்ப.

௬௪. விடாமழையின் பெயர் — சோனையும் பனித்தலும் விடாது சொரிதல்

௬௫. தலைப்பெய்மழையின்பெயர்—தளியுறையாலி தலையல்தலைப்பெயல்.

௬௬. மற்றுந்தலைப்பெய்மழையின்பெயர்—* தலைப்பெயல்சோதகமும்.

௬௭. ஆலாங்கட்டியின்பெயர்—ஆலிகனோ பலமாலாங்கட்டி.

௬௮. மற்றும் ஆலாங்கட்டியின்பெயர்—கரகமுமாகுமென்மனார் புலவர்.

௬௯. மழைத்துவலையின்பெயர்—சிதரம் பிதிரோ சீகரஞ்சிதரோ-தூவல்துமிதந்திவலையுந் துவலை—துவலையின்பெயரெனச் சொல்லலாகும்.

௭௦. மழைவிடலின்பெயர்—தூறலுந்தலையலுஞ் சோதகமுமழைவிடல்.

௭௧. எழுமேகவகைப்பெயர்—சம்வர்த்தமாவர்த்தம் புட்கலா வர்த்தஞ், சங்காரித்தத் துரோணங் காளமுகி, நீல வருணமேழ் மேகப் பெயரே.

௭௨. அவற்றுள்—எழுமழை வகைப்பெயர்—மணிநீர் பொன்பூ மண்கற்றீயென், றெழுவகை மேகம் பொழிமாரி யேழே.

௭௩. வருணன் பெயர்—சலபதி பாச தரனதிகேள்வன்—வருபுனற்செல்வன் வருணன் பெயரே.

௭௪. வெள்ளத்தின் பெயர்—பிரளய நீத்தம் வார்சி வெள்ளம்.

௭௫. மற்றும் வெள்ளத்தின்பெயர்—ஓதமும் பெருக்குமாகலு முரித்தே.

௭௬. பனியின்பெயர்—இமமுந் துகினமுமஞ்சுநீகாரமும்—பனியின்பெயரே மந்தமும் பகரும்.

௭௭. நிறைபுனலின்பெயர்—வழாறும் பிராறும் வாரியு நிறைபுனல்.

௭௮. நீந்துபுனலின்பெயர்—அகாத மென்பது நீந்து புனலே.

௭௯. தெளிந்த நீரின்பெயர்—சற்சல மென்பது தெளிந்தநீரே.

* "துளியின்பெயரே சோதகமாகும்" எனவும்பாடம்.

சுக. மின்னலின்பெயர்— சம்பை, வித்து, சபலை, தடித்து,சஞ்சலை, கனருசி, தடி, ஒளி. (அ)

சுஉ. மழையின்பெயர்—மாரி, வானம், வருடம். (ங)

சுங. பெருமழையின்பெயர்—ஆசாரம். (க)

சுச. விடாமழையின்பெயர்—சோனை,பணித்தல். (உ)

சுரு. தலைப்பெய்மழையின் பெயர்—தளி, உறை, ஆலி, தலையல். (ச)

சுசு. மற்றுந்தலைப்பெய்மழையின்பெயர்—சோதகம். (க)

சுஎ. ஆலாங்கட்டியின்பெயர்—ஆலி, கனோபலம். (உ)

சுஅ. மற்றும் ஆலாங்கட்டியின்பெயர்—கரகம். (க)ஆ (ங)

சுகூ. மழைத்துவலையின்பெயர்—சிதரம், பிதிர், சீகரம்; சிதர், தூவல், துமிதம், திவலை. (எ)

எ0. மழைவிடலின்பெயர்—தூறல், தலையல், சோதகம். (ங)

எக. எழுமேகவகைப்பெயர்—சம்வர்த்தம்,ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம்,துரோணம், காளமுகி, நீலவருணம். (எ)

எஉ. அவற்றுள் எழுமழைவகைப்பெயர்—மணி, நீர், பொன், பூ, மண் கல், தீ. (எ)

எங. வருணன்பெயர்—சலபதி, பாசதரன், நதிகேள்வன், புனற்செல் வன். (ச)

எச. வெள்ளத்தின்பெயர்—பிரளயம், நீத்தம், வாரி. (ங)

எரு. மற்றும் வெள்ளத்தின்பெயர்—ஓதம், பெருக்கு. (உ) ஆ (ரு)

எசு. பனியின்பெயர்—இமம், துகினம், மஞ்சு, நீகாரம், ஏமந்தம். (ரு)

எஎ. நிறைபுனலின்பெயர்—வழாறு, பிராறு, வாரி. (ங)

எஅ. நீந்துபுனலின்பெயர்—அகாதம். (க)

எகூ. தெளிந்தநீரின்பெயர்—சற்சலம். (க)

அ0. கலங்கனீரின் பெயர்—ஆவிலங்கலுழி யுடம்பை கலங்கற்புனல்.

அக. நீரோட்டத்தின் பெயர்—கோலமென்பது கொடுநீ ரோட்டம்.

அஉ. நீர்த்திரையின் பெயர்—அறலுந்தரங்கமு மலையுங்கல் லோலமும், புனலின்றிரைக்குப் பொதுப்பெயராகும்.

அ௩. மற்றும்நீர்த்திரையின்பெயர்-சிகரமென்பதுந்திரையின் பொதுவே.

அ௪. நீர்க்குமிழியின்பெயர்—கொப்புண்மொக்குள் புற்புதங்குமிழி.

அரு. ஆழநீரின்பெயர்—அழுந்துங்குண்டுங் கயமு மாழநீர்.

அசு. நீர்ச்சுழியின்பெயர்—உந்தியுஞ்சுரியலு நீர்ச்சுழியாகும்.

அஎ. நுரையின்பெயர்—பேனமும் பேவுநுரையின் பெயரே.

அஅ. பரிவேடத்தின்பெயர்—ஊர்கோள் வட்ட மொளிகொண் மண்டிலம், பரிதி விசயம் பரிவேட மாகும்.

அகூ. இந்திரவில்லின்பெயர்—வானவில்லிந்திர வில்லென வைப்பர்.

கூ0. காமகாண்டத்தின்பெயர்—இரட்டைவில் காம காண்ட மாகும்.

கூக. இருளின்பெயர்—அல்லுந் திமிரங்கருளே கருவரி - கச்சள மந்தகாரந் துவாந்த-நத்தந் தமமொடு துணங்கற விருளே.

கூஉ. பதினெண்கணத்தின்பெயர் — அமரர் சித்த ரசுரர் தைத்தியர் கருடர் கின்னரர் நிருதர் கிம்புருடர்-காந்தருவ ரியக்கர் விஞ்சையர் பூதர்-பசாசர்அந்தரர் முனிவ ருரக-ராகாய வாசியர் போகபூ மியரெனப்-பாகு பட்டன பதினெண் கணமே.

முதலாவதுவான்வகை முற்றிற்று.

ஆ சூத்திரம் கூஉ.

அ௦. கலங்கனீரின்பெயர்—ஆவிலம், கலுழி, உடம்பை. (ங)

அக. நீரோட்டத்தின்பெயர்—சோலம். (க)

அஉ. நீர்த்திரையின்பெயர்—அறல், தரங்கம், அலை, கல்லோலம். (ச)

அங. மற்றும் நீர்த்திரையின்பெயர்—சிகரம். (க) ஆ (ரு)

அச. நீர்க்குமிழியின்பெயர்—கொப்புள், மொக்குள், புற்புதம். (ங)

அரு. ஆழநீரின்பெயர்—அழுந்து, குண்டு, கயம். (ங)

அசு. நீர்ச்சுழியின்பெயர்—உந்தி, சுரியல். (உ)

அஎ. நுரையின்பெயர்—பேனம், பே. (உ)

அஅ. பரிவேடத்தின்பெயர்—ஊர்கோள், வட்டம், மண்டிலம், பரிதி விசயம். (ரு)

அக. இந்திரவில்லின்பெயர்—வானவில். (க)

கூ௦. காமகாண்டத்தின்பெயர்—இரட்டைவில். (க)

கூக. இருளின் பெயர்— அல், திமிரம், கருள், கருவரி, கச்சளம், அந்தகாரம், துவாந்தம், தமம், நத்தம், துணங்கறல். (க௦)

கூஉ. பதினெண்கணவகைப்பெயர்—அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், கிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசியர், போகபூமியர். (கஅ)

முதலாவதுவான்வகை முற்றிற்று

ஆ சூத்திரம் கூஉ.



## இரண்டாவது

# வானவர்வகை.

கூரு. கணபதியின் பெயர்—ஏகதந்த னிறைமகனேரம்ப - ஞுகு வாகன னைங்கரன் முக்கணன் - பார்ப்பதி புதல்வன் பாசாங் குசதர - னத்தி முக த்தோ னரிதிரு மருகன் - றந்திக் கடவு டான மும்மதன் - கங்கைசுதன்வி நாயகன் கணபதிபெயரே. (க)

கூசு. சிவன்பெயர்—அரன்சிவ னரூபி யனந்த னுருத்திரன் - பரன்க றை மிடற்றோன் பார்ப்பதி கொழுநன் - கால காலன் பசுபதி கண்ணுத-லுனு வெண்குணன் சங்கர னந்தி - யாதி சசிதர னைம்முகன் பிஞகி-சோதி சம்பு சூலி பிஞ்ஞகன் - முக்கணன் விடை யோன் முன்னவன் பிறப்பிலி - நக்கன் சடையோ னுயகன் சயம்பு - காம நாசன் பிதாகரு ணலயன் - றேவ தேவன் றிரிபு ராந்தகன் - மானிட மேந்தி பேயோடாடி-முத்தன் முதல்வன் சுத்தன்யோகி - வேத முதல்வ னரி பாக - னுலமர்க டவுள் பவனேயநாதி - நீலகண்ட னிருத்தன்பூ தேசன் - கங்கா தரன்மழு வாளி கபாலி - யங்கணன் கைலையாளிகங் காள - னக்கர வார்த்தோ னழ லாடி தற்பர - னித்தனிமல னீறணிகடவுள் - யானை யுரித்தோ னமலனனந்த ன் - வாம தேவன் மகேச்சுரன் சதாசிவன் - றிரியம்பகன் விமலன் சந்திர சே கரன் - மாலயற் கரியோ னுதனெண் டோளன் - ஞான மூர்த்தி நம்பன் பகவ ன் - வாமன் கிரீசன் வரனு மாபதி - பூதபதி புண்ணியன் புலித்தோ லுடை யோன் - மாதேவன் கொன்றை மாலையன் பித்த - னீச்சுர னுச மில்லோனி றைவன் - பாசுபதன் குன்ற வில்லிபாண் டரங்க - னீசன் பரமனு மெம்பிரான் பெயரே. (உ)

கூகு. மற்றுஞ்சிவன்பெயர்—அந்தி வண்ணன் காமாரி புராரி - யந்தகா ரிபார்க்கனென் றனந்தமீசன்பெயர். (ரு)

கூசு. சிவனூர்திகொடியின்பெயர் — ஊர்தியுங்கொடியு மிடப மென்று ரைப்பர். (சு)

கஎ. சிவன்படையின்பெயர்—பரசுஞ்சூலமும் பிஞகவில்லும்படை.(௬)

கஅ. சிவனெண்குணத்தின்பெயர்— பவமின்மை பிறவின்மை பற்றின் மை பெயரின்மை - உவமை யின்மையொரு வினை யின்மை - குறைவிலறி வுடைமை கோத்திர மின்மையென் - றிறைவ னிடத்தி லெண்குண மிவையே.

## இரண்டாவது

# பெயர்ப்பிரிவு.

கங. கணபதியின் பெயர்—ஏகதந்தன், இறைமகன், ஏரம்பன், ஆகுவாசனன், ஐங்கரன், முக்கண்ணன், பார்ப்பதிபுதல்வன், பாசாங்குசதரன், அத்திமுகத்தோன், அரிதிருமருகன், தந்திக்கடவுள், மும்மதன், கங்கைசுதன், விநாயகன். (கச)

கச. சிவன் பெயர்—அரன், அரூபி, அனந்தன், உருத்திரன், பரன், கறைமிடற்றோன், பார்ப்பதிகொழுநன், காலகாலன், பசுபதி, கண்ணுதல், தாணு, எண்குணன், சங்கரன், நந்தி, ஆதி, சசிதரன்; ஐம்முகன்; பிஞ்ஞகி, சோதி, சம்பு, சூலி, பிஞ்ஞகன், முக்கண்ணன், விடையோன், முன்னவன், பிறப்பிலி, நக்கன், சடையோன், நாயகன், சயம்பு, காமநாசன், பிதா, கருணாலயன் தேவதேவன், திரிபுராந்தகன், மானிடமேந்தி, பேயோடாடி, முத்தன், முதல்வன், சுத்தன், யோகி, வேதமுதல்வன், நாரிபாகன்; ஆலமர்கடவுள், பவன் அநாதி, நீலகண்டன், நிருத்தன், பூதேசன், கங்காதரன், மழுவாளி, கபாலி. அங்கணன், கைலையாளி, கங்காளன், அக்கரவார்த்தோன், அழலாடி, தற்பரன், நித்தன், நிமலன், நீறணிகடவுள், யானையுரித்தோன், அமலன், ஆனந்தன் வாமதேவன், மகேச்சுரன், சதாசிவன், திரியம்பகன், விமலன், சந்திரசேகரன், மாலயற்கரியோன்; நாதன், எண்டோளன், ஞானமூர்த்தி, நம்பன், பகவன், வாமன், கிரீசன், வரன், உமாபதி, பூதபதி, புண்ணியன், புலித்தோலுடையோன், மாதேவன், கொன்றைமாலையன், பித்தன், ஈச்சுரன், நாசமில்லோன், இறைவன், பாசுபதன், குன்றவில்லி, பாண்டரங்கன், ஈசன், பரமன், பிரான். (கசு)

கரு. மற்றுஞ்சிவன் பெயர்—அத்திவண்ணன், காமாரி, புராரி, அந்தகாரி, பர்க்கன். (ரு) ஆ (கஎ0)

கசு. சிவனூர்திகொடிவகைப் பெயர்—இடபம். (க)

கஎ. சிவன்படையின் பெயர்—பரசு, சூலம், பினாகவில். (ங)

கஅ. சிவனெண்குணத்தின் பெயர் — பவமின்மை, இறவின்மை, பற்றின்மை, பெயரின்மை, உவமையின்மை, ஒருவினையின்மை, குறைவிலறிவுடைமை, கோத்திரமின்மை. (அ)

௯௯. சிவனைம்முகத்தின்பெயர்— ஈசானந் தற்புருட மகோரம் வாமஞ்-சத்தியோ சாதஞ் சங்கர னைம்முகம். (எ)

௧00. சிவனிருப்புமுதலியவகைப்பெயர்—இருப்பதுகைலை தரிப்பது கங்கை - முடிப்பது கொன்றை யுடுப்பது சருமம். (அ)

௧0௧. சிவபதநான்கின்பெயர்—தானுளுல கிருத்தறன்பா டிருத்தல்-தானும்பதம்பெற ருணுகுதலென - நாலே சிவன்ற னல்லருட் பதமே. (௯)

௧0௨. சிவபூசையியல்பின் பெயர்—சரியை கிரியையோக ஞானமென்-றிவையொரு நான்குஞ் சிவபூசை யியல்பே. (௧0)

௧0௩. சிவாகமநூற்பயன்பெயர்—தர்மார்த்தகாமமோக்கஞ்சிவாகமம்(௧௧)

௧0௪. நந்தியின்பெயர்—எருது விடையே றிடபம் புங்கவ, மிறைவாகனஞ்சிவ. கணமுத னந்தி. (௧௨)

௧0௫. சிவனழித்தமுப்புரத்தின் பெயர்— பொன்னினும் வெள்ளியினும் புக விரும்பினு - மன்னமும் மதில்சிவ னழித்தமுப் புரமே. (௧௩)

௧0௬. உமையின்பெயர்—ஆரியை காமக் கோட்டி யம்பிகை - நாரி சத்தி நாயகி கௌரி - தேவி சாம்பவி தருமச் செல்வி - மலைமகள் சங்கரிமாதா வைஷ்ய - பவாயே யுருத்திரை பார்ப்பதி யந்தரி-நீலி கன்னி நிமலி குமரி - வேத முதல்வி விமலமுக் கண்ணி - யமலை யிமய வதியயி ராணி - சமய முதல்வி தற்பரை மனோன்மனி - சிவையுமை யம்மை திருநாம மென்ப. (௧௪)

௧0௭. மற்று முமையின்பெயர்—அரனிடத்தவள்சக மீன்றவள் பவானியெமதன்னை புண்ணிய முதல்வி பெயரோ.. (௧௫)

௧0௮. கங்கையின்பெயர்—வராநதி சுரநதி மந்தா கினியுமை - காநதி தசமுக நதிகங் காநதி - சிரநதி சிவன்சடை சேர்தெய்வ நதியே. (௧௬)

௧0௯. முப்பத்திரண்ட றத்தின்பெயர்—ஆதுலர்சாலை யோதுவார்க் குணவு-சமயத்தோர்க்குண்டி பசுவிற்கு வாயுறை - சிறைச்சோ றைய நடைதின் பண்ட - மறவைச் சோறு மகப்பெறு வித்தன் - மகவு வளர்த்தன் மகப்பாஸ்வார்த்த - லறவைப்பிணஞ்சுடுத லறவைத்தூரியஞ் - சுண்ணநோய் மருந்து வண்ணார்நாவிதர் - கண்ணாடி காதோலை கண்மருந்து தலைக்கெண்ணெய் - பெண்போக மற்றும் பிறர்துயர் காத்த - றண்ணீர்ப் பந்தர் மடத்தடக் காவே - யாவுரிஞ்சுதறி விலங்கிற் குணவோ - டேறு விடுத்தல் விலைகொடுத் துயிர்விடுத்த - றன்னிலை யுயர்ந்தகன்னிகா தான - மிக்கான் கெட்டு மிறைவி செய் தருமம். (௧எ)

கூகூ. சிவனைம்முகத்தின் பெயர் — ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம். (ரு)

க00. சிவனிருப்புமுதலியவகைப் பெயர்—இருப்பது கைலை. தரிப்பது கஙகை. முடிப்பது கொன்றை. உடுப்பது சருமம்.

க0க. சிவபதநான்கின்பெயர்—*தானுளுலகிருத்தல், தன்பாடிருத்தல், தானும்பதம்பெறல், தானாகுதல். (ச)

க0உ. சிவபூசையியல்பின் பெயர் — சரியை, கிரியை, யோகம், ஞானம். (ச)

க0ங சிவாகமநூறபயன் பெயர்—தர்மம், அர்த்தம்,காமம்,மோக்கம்(ச)

க0ச நந்தியின்பெயர்—எருது, விடை, ஏறு, இடபம, புங்கவம், இறைவாகனம், சிவகணமுதல். (எ)

க0ரு. சிவனழித்தமுப்புரத்தின் பெயர்—பொன்மதில், வெள்ளிமதில், இருப்புமதில். (ங)

க0சு. உமையின் பெயா—ஆரியை, காமக்கோட்டி, அம்பிகை, காளி, சத்தி, நாயகி, கௌரி, தேவி, சாம்பவி, தருமச்செல்வி, மலைமகள், சங்கரி, மாதா, ஐயை, பரை, உருத்திரை, பார்ப்பதி, அந்தரி, நீலி, கன்னி, நிமலி, குமரி. வேதமுதல்வி, விமலை, முக்கண்ணி, அமலை, இமயவதி, அயிராணி, சமயமுதல்வி, தற்பரை, மனோன்மணி, சிவை, அம்மை. (ஙங)

க0எ. மற்றும் உமையின் பெயர் — அரனிடத்தவள், சகமீன்றவள், பவானி, அன்னை, புண்ணியமுதல்வி. (ரு)ஆக (ஙஅ)

க0அ. கங்கையின் யெயா—வரநதி, சுரநதி, மந்தாகினி, உமைகரநதி, தசமுகநதி, சிரநதி, தெய்வநதி. (எ)

க0கூ. முப்பத்திரண்டறத்தின்பெயர்—ஆதுலர்க்குச்சாலை,ஓதுவார்க்குணவு, அறுசமயத்தோர்க்குண்டி, பசுவிற்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், இன்பண்டகல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால்வார்த்தல், அறவைப்பிணஞ்சுடுதல், அறவைத்துரியம், சுண்ணம், கோய்மருந்து, வண்ணார், நாவிதர். கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தர், மடம், தடம், சாவு, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்துயிர்காத்தல், கன்னிகாதானம். (ஙஉ)

---

* இவற்றைச் சாலோகமுதலிய முத்திகளாகக்கொள்க.

கக0. அறுமுகக்கடவுள் பெயர்—குமரன் றெய்வ குஞ்சரி மணாளன் - சிலம்பன் முருகன் சேயே செவ்வேள் - கடம்பன் சாமி கார்த்தி கேயன் - சேந்தன் குறிஞ்சிக் கிழவன் செட்டி - காங்கேயன் கௌரி மைந்தன் கந்தன் வேலன் வள்ளி கேள்வன் விசாகன் - குரு காரி குகன் சர வணபவன் - மயி ல்வா கனனே வன்னிப்பூக்குமர, னறிரு கரத்தோ னரிதிரு மருகன் - குழக ன்கங்கை மைந்தன்குன் றெறிந்தோ - னறுமீன்காதல னசுரற் றடிந்தோன், சேவலங் கொடியோன் றேவசே னாபதி - பாவகி யாசான் கலையறி புலவ - னரன்மகன் யானை முகவற்கிளையோ - னிவைய வறுமுகக் கடவுள் பெயரே.

ககக. அறுமுகக்கடவுளூர்தியின்பெயர்—ஆடும்யானையு மயிலு மூர்தி. ()

ககஉ. அறுமுகக்கடவுள்படைகொடியின்பெயர்—அயில்வே லரும்படை கொடிசேவ லாகும். (உ0)

ககங. மாலையின்பெயர்—நீபமுஞ் செச்சையு மாலையாகும். (உக)

ககச, வீரபத்திரன்பெயர்—உக்கிர னழற்கண்வந்தோ னுமைமகன் - மு க்கணன் றக்கன் வேள்வி முனிந்தோ - னேக வீரியன் சடாதரன் வில்லி - யீ சன் மைந்தன் கணபதிக் கிளையோ - னாயிரமுகத்தோன் சிம்பு ளானோன் - பத்திரை கேள்வன் வீரபத் திரன்பெயர். (உஉ)

ககரு. வைரவன்பெயர்—கஞ்சுகன் மூவிலை வேலோன் காரி - மூத்தன் கேத்திர பாலனிரு வாணி - சித்தன் ஞாளியூர்தி கபாலி - வடுக னின்னவை வயிரவன் பெயரே. (உங)

ககசு. வைரவனூர்திபடையின்பெயர் — வைரவ னூர்தி ஞமலிசூலம் படை. (உச)

ககஎ. ஐயனார்பெயர்—சாத வாகனன் கோழிக்கொடியோன் - சாத்தன் வெள்ளை யானை வாகனன் - காரிசெண் டாயுதன் கடனிற வண்ணன் - பூரணை கேள்வன் புட்கலை மணாள - னாரிய னறத்தைக் காப்போன் யோகி - யரிகர புத்திர னையன் பெயரே. (உரு)

ககஅ. ஐயனாரூர்திகொடியின் பெயர் — காரி யூர்தி காரிக் குதிரை - கோழிக்கொடியு மாகுமென்ப. (உசு)

ககக. மாகாளியின்பெயர் — குமரி சண்டிகை குண்டலி நீலி, வலவை பைரவி கௌமாரி மாதரி - மாயை வீரி மதங்கி யாமளை - சூரிவேதாளி கங் காளி யோகினி-சூலிசாமுண்டி தாருகாரி- யாரியைதேவி வல்லணங்கயை யலகைக் கொடியாண் மாலினி முக்கண்ணி -பதுமையெண்டோளி பத்திரி யாரணி-யாளி யூர்திமா காளி பெயரே. (உஎ)

ககo. அறுமுகக்கடவுள் பெயர்—குமரன், தெய்வகுஞ்சரிமணாளன், சிலம்பன், முருகன், சேய், செவ்வேள், கடம்பன், சாமி, கார்த்திகேயன், சேந்தன், குறிஞ்சிக்கிழவன், செட்டி, காங்கேயன், கௌரிமைந்தன், கந்தன், வேலன், வள்ளிகேள்வன், விசாகன், தாரகாரி, குகன், சரவணபவன், மயில்வாகனன், வன்னிப்பூக்குமரன், ஆறிருகரத்தோன், அரிதிருமருகன், குழகன், கங்கைமைந்தன், குன்றெறிந்தோன், அறுமீன்காதலன், அசுரற் றடிந்தோன், சேவலங்கொடியோன், தேவசேனாபதி, பாவகி, ஆசான், கலையறிபுலவன் அரன்மகன், யானைமுகவற்கிளையோன். (௩எ)

கக௧. அறுமுகக்கடவுளூர்தியின் பெயர்—ஆடு, யானை, மயில். (௩)

கக௨. அறுமுகக்கடவுள்படைகொடியின் பெயர்—படைவேல்: கொடி சேவல். (௨)

கக௩. மாலையின் பெயர்—நீபம், செச்சை. (௨)

கக௪. வீரபத்திரன் பெயர்—உக்கிரன், அழற்கண்வந்தோன், உமைமகன், முக்கணன், தக்கன்வேள்விமுனிந்தோன், ஏகவீரியன், சடாதரன், வில்லி, ஈசன்மைந்தன், கணபதிக்கிளையோன், ஆயிரமுகத்தோன், சிம்புளானோன் பத்திரைகேள்வன். (க௩)

கக௫. வைரவன் பெயர்—கஞ்சுகன், மூவிலைவேலோன், காரி, முத்தன், கேத்திரபாலன், நிருவாணி, சித்தன், ஞாளியூர்தி, கபாலி, வடுகன், (கo)

கக௬. வைரவ னூர்தி படையின் பெயர் — ஊர்தி, ஞமலி: படை, சூலம்.

ககஎ. ஐயனார் பெயர்—சாதவாகனன், கோழிக்கொடியோன், சாத்தன் வெள்ளையானைவாகனன், காரி, செண்டாயுதன், கடனிறவண்ணன்; பூரணைகேள்வன், புட்கலைமணாளன், ஆரியன்; அறத்தைக்காப்போன், யோகி, அரிகரபுத்திரன். (க௩)

கக௮. ஊர்தி, காரிக்குதிரை: கொடி, கோழிக்கொடி.

கக௯. மாகாளியின் பெயர்—குமரி, சண்டிகை, குண்டலி, நீலி, வலவை, பைரவி, கௌமாரி, மாதரி, மாயை, வீரி, மதங்கி, யாமளை, சூரி, வேதாளி, கங்காளி, யோகினி, சூலி, சாமுண்டி, தாரகாரி, ஆரியை, தேவி, வல்லணங்கு, ஐயை, அலகைக்கொடியாள், மாலினி, முக்கண்ணி, பதுமை, எண்டோளி, யாளியூர்தி. (௩க)

கஉ0. மாகாளி யூர்தி கொடிபடையின்பெயர் — ஊர்திசிங்க மூயர் கொடி யலகை- சூலம் படையெனச் சொல்லப்படுமே. (உஅ)

கஉக. இடாகினியின் பெயர் — வஞ்சனி மாயவள் வலவையிடாகினி.

கஉஉ. யோகினியின்பெயர்—சன்மினிசூர்மகள் யோகினிபெயரே(௩0)

கஉ௩. ஊர்திகொடியின்பெயர் — பேய்கொடி வாகன மோரியாகும். ()

கஉ௪. துர்க்கையின் பெயர்— அந்தரி மகிடற் காய்ந்தாளையை - விந்தை யம் பணத்தி விசயையெண்டோளி - மாலுக்கிளையாள்பகவதிசயமகள்-பாலை க்கிழத்தி வீரச்செல்வி - கௌரிகாத்தியாயனி சக்கராயுதி, யமரி குமரி யருங் கலை யூர்தி - சமரி கன்னி சயைவாட் படையாள் - சூலி யாரியை நீலி சண்டிகை, வெற்றிமேதித் தலைமிசை நின்ருள், கொற்றவை நாராயணி துர்க்கை பெயரே. (௩உ)

கஉ௫. துர்க்கையின் படைவாகனத்தின் பெயர்— கைவாள் படை வாகனங் கலையாகும். (௩௩)

கஉ௬. காடுகாள்பெயர் — காடுகாண் மோடி காரிதாய் கொற்றி - மாரி சூரி வடுகிமூ தணங்கே. (௩௪)

கஉஎ. சத்தமாதர்கள் பெயர் — பிரமாணி நாராயணி மாயேசுரி - கௌமாரி வராகி யுருத்திராணி - யிந்திராணியென் றெழுவகைமாதர். (௩௫)

கஉஅ. சத்தமாதர்களூர்தியின்பெயர் —அன்னமேறு விடையே யலகை, மஞ்ஞை களிறுகலுழனு மூர்தி. (௩௬)

கஉகூ. சத்தமாதர்கள்படையின்பெயர்—மறைதண்டு சூலம் பிணைமெஃகம் - வச்சிரமாழிவன்படை யாகும். (௩எ)

க௩0. விட்டுணுவின் பெயர் — மாதவனெடியோன் மாயவன் சநார்த்தனன் - சீதரன் பதும நாபன் திருமால் - கொண்டல் வண்ணன் கோவிந்தன் முகுந்தன் - விண்டுவன மாலி வாமன் வாமனன் - திரிவிக்கிரமன் திருமறு மார்பன் - கேசவன் வரதன் முராரி யனந்தன் - காவற் கடவுள் காகுத்த னச்சுத - னரவணைச் செல்வ னறிதுயி லமர்ந்தோன் - சக்கராயுதனே சார்ங்க பாணி - தண்கடல் வண்ணன் சலச விலோசன - னுலகினை யளந்தோ னுலக முண்டோன் - படிமுழுதிடந்தோ னலகைமுலை யுண்டோன் -ருமோதரனே

௬உ0. மாகாளியூர்திகொடிபடையின்பெயர்— ஊர்தி, சிங்கம்: கொடி, அலகை: படை, சூலம்.

௧உ௧. இடாகினியின்பெயர் — வஞ்சனி, மாயவள், வலவை, இடாகினி. (௪)

௧உஉ. யோகினியின்பெயர்—சன்மினி, சூர்மகள். (உ)

௧உ௩. ஊர்திகொடியின் பெயர்—கொடி, பேய்: வாகனம், ஓரி.

௧உ௪. துர்க்கையின் பெயர்— அந்தரி, மகிடற்காய்ந்தாள், ஐயை, விந்தை, அம்பணத்தி, விசயை, எண்டோளி, மாலுக்கிளையாள், பகவதி, சயமகள் பாலைக்கிழத்தி, வீரச்செல்வி, கௌரி, காத்தியாயனி, சக்கராயுதி, அமரி, குமரி, கலையூர்தி; சமரி, கன்னி, சயை, வாட்படையாள், சூலி, ஆரியை, நீலி, சண்டிகை, மேதித்தலைமிசைநின்றாள், கொற்றவை, நாராயணி. (உ௧)

௧உ௫. துர்க்கையின் படை வாகனத்தின் பெயர் — படை கைவாள்: வாகனம், கலை.

௧உ௬. காடுகாள் பெயர்—மோடி, காரிதாய், கொற்றி, மாரி, சூரி, வடுகி மூதணங்கு. (எ)

௧உஎ. சத்தமாதர்கள் பெயர் — பிரமாணி, நாராயணி, மாயேசுரி, கௌமாரி, வராகி, உருத்திராணி, இந்திராணி. (எ)

௧உ௮. சத்தமாதர்களூர்தியின்பெயர்—பிரமாணிக்குஅன்னம். வராகிக்கு ஏறு. மாயேசுரிக்குவிடை. உருத்திராணிக்கு அலகை. கௌமாரிக்குமஞ்ஞை. இந்திராணிக்குக்களிறு. நாராயணிக்குக்கலுழன். (எ)

௧உ௯. சத்தமாதர்கள்படையின் பெயர் — பிரமாணிக்குவேதம். வராகிக்குத்தண்டு. உருத்திராணிக்குச்சூலம். மாயேசுரிக்குப்பினாகம். கௌமாரிக்குவேல். இந்திராணிக்கு வச்சிராயுதம். நாராயணிக்குச் சக்கரம். (எ)

௧௩0. விட்டுணுவின்பெயர்—மாதவன், நெடியோன், மாயவன், சனார்த்தனன், சீதரன், பதுமநாபன், திருமால், கொண்டல்வண்ணன், கோவிந்தன், முகுந்தன், விண்டு, வனமாலி, வாமன், வாமனன், திரிவிக்கிரமன், திருமறு மார்பன், கேசவன், வரதன், முராரி, அனந்தன், காவற்கடவுள், காகுத்தன், அச்சுதன், அரவணைச்செல்வன், அறிதுயிலமர்ந்தோன், சக்கராயுதன், சார்ங்கபாணி, கடல்வண்ணன், சலசவிலோசனன், உலகினையளந்தோன், உலகமுண்டோன், படிமுழுதிடந்தோன், அலகமுலை யுண்டோன், தாமோதரன்,

சௌரிமது சூதன - ஞாதி பீதாம்பரனே வராகன் -திருமகள் பூமி கொழுநன் கண்ண - னுவண வூர்தி யுவண முயர்த்தோன் - பஞ்சாயுதன் பரந்தாமன் பகவன் - பூவை வண்ணன் புணரியிற் றுயின்றோன் - பிரமன் றந்தை பின் னைகேள்வன் - சங்கமேந்தி நாரசிங்க - னிருடிகேசன் றசவவதாரன் - குற ளனெடுமால் வலவன் கரியோ - னுந்தி பூத்தோ னந்த கோபாலன் - வாசு தேவன் றுளபமௌலிய - னனந்த சயனன் வைகுந்த நாத-னுயிரம் பெயரோ னரிமா லென்றிவை - நாராயணன் றிருநாம மாகும். (௩௮)

க௩௧. மற்றும்— அருந்தமனென்பது மாங்கவன் பெயரே. (௩௯)

க௩௨. விட்டுணுவினூர்திகொடியின் பெயர் — ஊர்திகருடனுங்கொ டியு மதுவே. (௪௦)

க௩௩. விட்டுணுவின் பஞ்சாயுதத்தின்பெயர் — சக்கரந் தனுவா ளண்டு சங்கம் - பற்றலர் மேல்விடும் பஞ்சாயுதமே. (௪௧)

க௩௪. அவற்றுள் சக்கரத்தின்பெயர்— சக்கரஞ் சுதரிசனம் (௪௨)

க௩௫. தனுவின்பெயர் —தனுவேசார்ங்கம் (௪௩)

க௩௬. வாளின் பெயர்—சயவாணந்தகம் (௪௪)

க௩௭. தண்டின்பெயர்—தண்டுகௌமோதகி. (௪௫)

க௩௮. சங்கின்பெயர்—சங்கு பாஞ்ச சன்னியமாகும். (௪௬)

க௩௯. அரியின் தசாவதாரத்தின் பெயர் — மச்சங் கூர்மம் வராகநரசிங் கம் - வாமனன் பரசு ராமனிராமன் - பலபத்திரனே கண்ணன்வரு கற்கியெ ன் - றிவையொரு பத்து மரியவ தாரம். (௪௭)

க௪0. அன்றியு மூவைந்தவதாரத்தின்பெயர்—சனகன் சனந்தனன்சனு தன் சனற்குமார - னரநாராயணன் கபில னிடப - னாரத னயக்கிரீவன் றத் தாத் திரேயன் - மோகினிவேள்வியின் பதியே வியாதன் - றன்வந்திரியே பௌத்த னென்றுங் - கின்னமூ வைந்து மரியவதாரம். (௪௮)

க௪க. வெற்றிக்கலப்பைப்படையோனொழியப், புத்த னென்று புகலப் படுமே. (௪௯)

க௪௨. திருமகளின்பெயர் — பொருளின் செல்வி பொறியரிப்பிரியை - மலர்மக ளிந்திரை மாவே யிலக்குமி - கமலை யாக்கம் பதுமைசீதேவி - தாக் கணங் கிளையா ளண்கடற் பிறந்தாள் - மாதிரு மார்பினள் மாமறைத் தலைவி- செய்யாள் பூமக டிருமகள் பெயரே. (௫0)

சௌரி, மதுசூதனன், ஆதி, பீதாம்பரன், வராகன், திருமகள்கொழுநன், பூமிகொழுநன், கண்ணன், உவணவூர்தி, உவணமுயர்த்தோன், பஞ்சாயுதன், பரந்தாமன், பகவன், பூவைவண்ணன், புணரியிற்றுயின்றோன், பிரமன்றந்தை, பின்னைகேள்வன், சங்கமேந்தி, நாரசிங்கன், இருடிகேசன்; தசவவதாரன், குறளன், நெடுமால், வலவன், கரியோன், உந்திபூத்தோன், நந்தகோபாலன், வாசுதேவன், துளபமௌலியன், அனந்தசயனன், வைகுந்தநாதன், ஆயிரம்பெயரோன், அரி, மால், நாராயணன். (சுக)

கருக. மற்றும் விட்டுணுவின் பெயர்—அருந்தமன். (க) ஆ (எ0)

கருஉ. விட்டுணுவினூர்திகொடியின் பெயர்—கருடன். (க)

கருரு. விட்டுணுவின்பஞ்சாயுதத்தின் பெயர்—சக்கரம், தனு, வாள், தண்டு, சங்கம்.

கருச. அவற்றுள் சக்கரத்தின் பெயர்—சுதரிசனம். (க)

கருரு. தனுவின் பெயர்—சார்ங்கம். (க)

கருசு. வாளின் பெயர்—நாந்தகம். (க)

கருஎ. தண்டின் பெயர்—கௌமோதகி. (க)

கருஅ. சங்கின் பெயர்—பாஞ்ச சன்னியம். (க)

கருகூ. அரியின்தசாவதாரத்தின் பெயர்—மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், வாமனன், பரசுராமன், இராமன், பலபத்திரன், கண்ணன், கற்கி (க0)

கசுo. அன்றியுமூவைந்தவதாரத்தின்பெயர்—சனகன், சனந்தனன், சனற்தன், சனற்குமாரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்கிரீவன். தத்தாத்திரேயன், மோகினி, வேள்வியின்பதி, வியாதன், தன்வந்திரி, பௌத்தன். (கரு)

கசுக. பலராம ஞெழியமற்ற மூர்த்தங்களைப் புத்தனென்று சொல்லப்படும்.

கசுஉ. திருமகளின் பெயர்—பொருளின்செல்வி, பொறி, அரிப்பிரியை மலர்மகள், இந்திரை, மா, இலக்குமி, கமலை, ஆக்கம், பதுமை, சீதேவி, தாக்கணங்கு, இளையாள், கடற்பிறந்தாள், மாறிருமார்பினள், மறைத்தலைவி, செய்யாள், பூமகள், (கஅ)

கசங. பலபத்திரன்பெயர்—இரேவதி கொழுநன் குண்டல னுரோகணி-தநய னீலாம்பரனலாயுத - னச்சுதன் முன்னோன் காம பால - னநந்தன் வெள்ளை காளிந்தி மர்த்தனன் - பனந்துசன் முசலி கருந்துகி லுடையன் - பலதே வன்பலபத்திரன் பெயரே: (ருக)

கசச. பலபத்திரன் படை கொடியின் பெயர் — படையே கலப்பை கொடிபனையாகும். (ருஉ)

கசரு. காமன்பெயர்—மான்மகன் மதனன் மகரக்கொடியோன் - வேனி லாளி வில்வேள் வசந்த - னங்கச னநங்க னைங்கணைக் கிழவன் - றிங்கட்கு டையோன் றென்றற் றேரோன் - வனசன் வில்லி மோகன் மாமலர்க் கணை யோன் - மதிசகனிரதி காந்தன் மாரன் - மனோபவன் மனோசன் மனோபும ன்மதன் - றிருமகண் மைந்தன் சம்பர சூதன - னுருவிலிகடன்முர சோன் கைதைச் சுரிகையன்-கந்தர்ப்பன் சித்தசன் பூவாளி பூமன் - கருப்பு வில்லி காமன் பெயரே. (ருங)

கசசு. காமனூர்தி கொடியின்பெயர் — வாகனந்தென்றன் மகரங்கொ டியே. (ருச)

கசஎ. காமன்வில்கணையின் பெயர்—கழையேவில்லுக்கணைமலரைந்தே.

கசஅ. காமனைங்கணையின்பெயர்—வனசஞ் சூதமசோக முல்லை - குவ ளை காமன் கொனுமைங்கணையே. (ருசு)

கசகூ. அவற்றின்செயலின் பெயர்—உன்மத்த மதனமோகனஞ் சந்தாப ம் - வசீகரணம்மிவை மதன்கணைச்செயலே. (ருஎ)

கரு0. அவற்றினவத்தையின்பெயர் — சுப்பிரயோகமும் விப்பிரயோக முஞ் - சோகமு மோகமு மரணமு மென்றிவை. யாகு மலர்க்கணை யைந்தி வைத்தை. (ருஅ)

கருக. அவற்றுள்—சுப்பிரயோகஞ் சொல்லாநினைவும். (ருகூ)

கருஉ. விப்பிரயோகம் வெய்துயிர்த் திரங்கல். (சு0)

கருங. சோகம் வெதுப்புத் துய்ப்பன தெவிட்டல். (சுக)

கருச. மோக மழுங்கலு மொழிபல பிதற்றலும். (சுஉ)

கருரு. மரண மயர்ப்பு மயக்கமு மாகும். (சுங)

கருசு. பிரமன்பெயர் — அந்தணன் மலரோ னயனுன் முகத்தோ -

கசரு. பலபத்திரன் பெயர்—இரேவதிகொழுநன், குண்டலன், உரோகணிதநயன். நீலாம்பரன், அலாயுதன், அச்சுதன்முன்னோன், காமபாலன், அநந்தன், வெள்ளை, காளிந்திமர்த்தனன், பனந்துசன், முசலி, கருந்துகிலுடையன், பலதேவன். (கச)

கசச. பலபத்திரன் படைகொடியின் பெயர் — படை, கலப்பை: கொடி, பனை.

கசரு. காமன் பெயர்—மான்மகன், மதனன், மகரக்கொடியோன், வேனிலாளி, வேள், வசந்தன், அங்கசன், அநங்கன், ஐங்கணைக்கிழவன், திங்கட்குடையோன், தென்றற்றேரோன், வனசன், வில்லி, மோகன், மலர்க்கணையோன், மதிசகன், இரதிகாந்தன், மாரன், மனோபவன், மனோசன், மனோபு, மன்மதன் திருமகண்மைந்தன், சம்பரசூதனன், உருவிலி, கடன்முரசோன், கைதைச்சுரிகையன், கந்தர்ப்பன். சித்தசன், பூவாளி, பூமன், கருப்புவில்லி. (௩உ)

கசசு. காமனூர்திகொடியின் பெயர் — வாகனம் தென்றல்: கொடி, மகரம்.

கசஎ. காமன்வில்கணையின் பெயர் — வில், கழை: கணை, ஐவகை மலர்.

கசஅ. காமனைங்கணையின் பெயர்—தாமரை, மாம்பூ, அசோகம், முல்லை, குவளை. (ரு)

கசகூ. அவற்றின்செயலின் பெயர்—பெருமயக்கு, சிந்தாகுலம், புணர்ச்சிக்கிணங்குதல், மோகனம், சந்தாபம், வசீகரணம். (ரு)

கரு0. அவற்றினவத்தையின் பெயர்— சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம். மோகம், மரணம். (ரு)

கருக. அவற்றுள் சுப்பிரயோகம், பேசாதொழியாநினைவு.

கருஉ. விப்பிரயோகம் பெருமூச்செறிந்து வருந்துதல்.

கருரு. சோகம் வெதும்பி யுணவு வெறுத்தல்.

கருச. மோகம் அழுதலும் பிதற்றுதலும்.

கருரு. மரணம் உயிர்சோர்தலு மயங்குதலும்.

கருசு. பிரமன்பெயர்—அந்தணன், மலரோன், அயன், நான்முகத்தோன்,

னுந்தியில் வந்தோனேதிம வாகனன்-பாரதி கொழுநன் படைப்போன்பகவ-னரண னிரணிய கருப்பன் விரிஞ்சன் - வேதா விதாதா விதிசதா நந்தன்-ருதா பிதாமகன் சம்பு மான் மக -னெண்கணன் கமல யோனிபிரசாபதி-வேதன் கம்மிறை சூதன் பரமேட்டி - திசைமுகன் வானவர்முதுவன் போதன்-வரனே குரவன் மண்பொதுத்தந்தை - யநந்தன் ஞான னன்ன மூயர்த்தோ - னிறைவன் மறையோன் பிரமன் பெயரே. (சுச)

கருஎ. பிரமனூர்திபடைகொடியின்பெயர்—அன்ன மூர்தி யரும்படை பாச - மன்னிய கதைபடை கொடிமறை யாகும். (சுரு)

கருஅ. நாமகளின்பெயர்—பாரதி தய்யாள் பனுவ லாட்டி - வேதமுதல்வி பிராமி விமலை - வாணி வெள்ளை நிறத்தினள் வாக்கா - ணுன்முகன் கிழத்தி ஞானத் திறைவி - காயத் திரியே சாவித் திரியே - நற்பா மடந்தை நன்னூன் மடந்தை - யுலகமாதா நாமக ளிசைமகள், கலைமகள் வெண்டாமமரைமகள் கண்ணு - டொலையா வென்னுயிர்த் துணைவிபெயரே. (சுசு)

கருகூ. நாமகளூர்தியின்பெயர்—ஊர்தி பூரமாகுமென்ப. (சுஎ)

கசுo. இந்திரன்பெயர்—அமரா வதியோ னுயிரங்கண்ணன் - சதமகன் கோபதி போகிசங் கிரந்தனன் - பாக சாதனன் வச்சிரப் படையோன் - மேகவாகனன் விண்முழுதாளி - வாசவன் மகவான் வானவன் கௌசிக - னாகண்டலனயி ராவதன்வலாரி - புருகூதன் சக்கிரன் புரந்தரன் மருத்துவன் - மருதக்கிழவன் வரைசிற கரிந்தோ - னரிசசிவல்லவன் றிருமலி சுவர்க்கன்-வேள்வி நாயகன் புலவன் வேந்தன் - புரோகிதன் சுனசி கரியவன் புனிதன்-காண்டா வனன்மால் வெள்ளை வாரணன் - றேவர் வேந்தன் பொன்னகர்ச்செல்வ - னைந்தரு நாத னிந்திரன் பெயரே. (சுஅ)

கசுக. இந்திரன்றேவிபெயர்—சுந்தரி சசியயிராணிபுலோமசை - யைந்தருச்செல்வி யிந்திரன்றேவிபெயர். (சுகூ)

கசுஉ, இந்திரன்மகன்பெயர்—சயந்த னிந்திரன் றன்மகனாகும். (எo)

கசுங. இந்திரனகரின்பெயர்—ஆங்கவன் றிருநகரமரா வதியே. (எக)

கசுச, இந்திரயானையின்பெயர்—ஓங்கிய வூர்தி வெள்ளையயி ராவதம். ()

கசுரு. இந்திரன் குதிரையின்பெயர்—மெச்சிய பரிமா வுச்சைச்சிரவம்.

கசுசு. இந்திரன்படை கொடியின் பெயர் — வச்சிரம் படையே வன்கொடியிடியாம். (எச)

கசுஎ. இந்திரன்மண்டபத்தின்பெயர்—மண்டபஞ் சயந்தம். (எரு)

உந்தியில்வந்தோன், ஓதிமவாகனன், பாரதிகொழுநன், படைப்போன், பகவன், ஆரணன், இரணியகருப்பன், விரிஞ்சன், வேதா, விதாதா, விதி, சதானந்தன், தாதா, பிதாமகன், சம்பு, மான்மகன், எண்கணன், கமலயோனி, பிரசாபதி, வேதன், கம், இறை, சூதன், பரமேட்டி, திசைமுகன், வானவர்முதுவன், போதன், வரன், குரவன், மண்பொதுத்தந்தை, அனந்தன், ஞானன், அன்னமுயர்த்தோன்; இறைவன்; மறையோன். (ருகூ)

கருஎ. பிரமனூர்திபடைகொடியின் பெயர் — ஊர்தி, அன்னம்: படை பாசம், தண்டம்: கொடி, மறை.

கருஅ. நாமகள் பெயர் — பாரதி, தய்யாள், பனுவலாட்டி, வேதமுதல்வி, பிராமி, விமலை, வாணி, வெள்ளைநிறத்தினள், வாக்காள், நான்முகன்கிழத்தி, ஞானத்திறைவி, காயத்திரி, சாவித்திரி, பாமடந்தை, நூன்மடந்தை, உலகமாதா, இசைமகள், கலைமகள், வெண்டாமரைமகள், கண்ணுள், உயிர்த்துணைவி. (உஉ)

கருகூ. நாமகளூர்தியின் பெயர்—பூரம.

ககூ0. இந்திரன் பெயர்—அமராவதியோன், ஆயிரங்கண்ணன், சதமகன் கோபதி, போகி, சங்கிரந்தனன், பாகசாதனன், வச்சிரப்படையோன், மேகவாகனன், விண்முழுதாளி, வாசவன், மகவான், வானவன், கௌசிகன், ஆகண்டலன், அயிராவதன், வலாரி, புருகூதன், சக்கிரன், புரந்தரன், மருத்துவன், மருதக்கிழவன், வரைசிறகரிந்தோன், அரி, சசிவல்லவன், திருமலி சுவர்க்கன், வேள்விநாயகன், புலவன், வேந்தன், புரோகிதன், சுனசி, கரியவன் புனிதன், காண்டாவனன், மால், வெள்ளைவாரணன், தேவர்வேந்தன், பொன்னகர்ச்செல்வன், ஐந்தருநாதன். (ருஅ)

ககூக. இந்திரன்றேவி பெயர்—சுந்தரி, சசி, அயிராணி, புலோமசை, ஐந்தருச்செல்வி. (ரு)

ககூஉ. இந்திரன்மகன்பெயர்—சயந்தன். (க)

ககூரு. இந்திரனகரின் பெயர்—அமராவதி. (க)

ககூச. இந்திரன்யானையின் பெயர்—அயிராவதம். (க)

ககூரு. இந்திரன்குதிரையின் பெயர்—உச்சைச்சிரவம். (க)

ககூகூ. இந்திரன்படைகொடியின் பெயர் — படை, வச்சிரம்: கொடி, இடி.

ககூஎ. இந்திரன்மண்டபத்தின் பெயர்—சயந்தம் (க)

௧௬௮, இந்திரன்மாளிகையின்பெயர்— மாளிகை வசந்தம். (எ௬)

௧௬௯. இந்திரன்பண்டாரத்தின்பெயர் — பண்டா ரப்பெயர் பகரிற் சுத ன்மம். (எஎ)

௧எ௦, இந்திரனந்தன வனத்தின் பெயர்—அந்தண் கற்பகச் சோலைநந் தனவனம். (எ௮)

௧எ௧. இந்திரன் சேமநிதிப்பெயர்—சேமநவநிதி. (எ௯)

௧எ௨. இந்திரன்கோவின்பெயர்—கோக்காமதேனு. (௮௦)

௧எ௩. இந்திரனுணவின்பெயர்—உணவதமுதம். (௮௧)

௧எ௪. புனைவதின்பெயர்—புனைவதுகற்பகமலர். (௮௨)

௧எ௫. அணிவதின்பெயர்—அணிவது சிந்தாமணி சூளாமணி. (௮௩)

௧எ௬. நாடகத்தரம்பையர் பெயர்—மேனகையரம்பையுருப்பசி திலோ த்தமை - யான நால்வரு நாடகத் தரம்பையர். (௮௪)

௧எஎ. தேவர்பொதுப்பெயர்—வானவ ரமுதர் வரர்புத்தேளிர் - மேலவ ரிமையவர் விண்ணவர் கடவுள-ரமரர் புங்கவராய ரிலேகர் - விபுதர் தீர்த்த ரசுரர்க்கமித்திர - ருயர்நிலை யோர்சுர ரும்பர் புலவ - ரண்டர் முதல்வ ராதி த்தர் சுவர்க்கர் - பொன்னுல குடையோர் தேவர் பொதுப்பெயர். (௮௫)

௧எ௮. முப்பத்துமுத்தேவர் பெயர் — ஆதித்தர் பன்னிருவ ரச்சுவினி களிருவ - ரீசர் பதினொருவரொண்மர் வசுக்க - ளாக முப்பத்து மூவர் தம் பெயரே. (௮௬)

௧எ௯. அவற்றுள். ஆதித்தர்பன்னிருவர்பெயர் — வைகத்தன் விவச்சு தன் வாசன்மார்த் தாண்டன் - பாற்கர னிரவி யுலோகப் பிரகாச - னுலோ க சாட்சி திரிவிக் கிரம - னாதித்தன் றிவாகரன் அங்கிச மாலி - யாகச் சூரியர் பன்னிரண் டென்ப. (௮எ)

௧௮௦. உருத்திரர்பதினொருவர் பெயர்—மாதேவனரனே யுருத்திரன்சங் கர - னீல லோகித னீசானன் விசயன் - வீம தேவன் பவோற்பவன்கபாலி- சௌமிய னேகா தசருருத் திரர்பெயர். (௮௮)

௧௮௧. அட்டவசுக்கள் பெயர்—தரன்றுருவன் சோம னபச் சைவ - ன னல னனிலன் பிரத்தியூசன் - பிரபாச னட்ட வசுக்கள் பெயரே. (௮௯)

கசுஅ. இந்திரன்மாளிகையின் பெயர்—வசந்தம்.

கசுகூ. பண்டாரத்தின்பெயர்—சுதன்மம். (க)

கஎ0. இந்திரனந்தனவனத்தின் பெயர்—கற்பகச்சோலை. (க)

கஎக. இந்திரன்சேமநிதிப் பெயா—நவநிதி. (க)

கஎஉ. இந்திரன்கோவின் பெயர்—காமதேனு. (க)

கஎஈ. இந்திரனுணவின் பெயர்—அமுதம். (க)

கஎச. பூனைவதின் பெயர்—கற்பகமலர்.

கஎரு. அணிவதின்பெயர்—சிந்தாமணி, சூளாமணி. (உ)

கஎசு. நாடகத்தரம்பையர் பெயர் — மேனகை, அரம்பை, உருப்பசி, திலோத்தமை. (ச)

கஎஎ. தேவர்பொதுப் பெயர்—வானவர், அமுதர், வரர், புத்தேளிர், மேலவர், இமையவர், விண்ணவர், கடவுளர், அமரர், புங்கவர், ஐயர், இலேகர், விபுதர்,தீர்த்தர், அசுரர்க்கமித்திரர், உயர்நிலையோர், சுரர், உம்பர், புலவர், அண்டர்,முதல்வர், ஆதித்தர், சுவர்க்கர், பொன்னுலகுடையோர். (உச)

கஎஅ. முப்பத்துமுத்தேவர் பெயர் — ஆதித்தர், பன்னிருவர்: அச்சுவினிகள், இருவர்: ஈசர், பதினொருவர்: வசுக்கள் எண்மர். (ஈ)

கஎகூ. அவற்றுள் ஆதித்தர்பன்னிருவர் பெயர் — வைகத்தன், விவச்சுதன், வாசன், மார்த்தாண்டன், பாற்கரன், இரவி, உலோகப்பிரகாசன், உலோகசாட்சி, திரிவிக்கிரமன், ஆதித்தன், திவாகரன், அங்கிசமாலி (கஉ)

கஅ0. உருத்திரர்பதினொருவர் பெயர் — மாதேவன், அரன், உருத்திரன்,சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன் கபாலி, சௌமியன். (கக)

கஅக. அட்டவசுக்கள் பெயர்—தரன், துருவன்,சோமன்,ஆபச்சைவன் அனலன், அணிலன், பிரத்தியூசன், பிரபாசன்.. (அ)

உகூடு௨. கரும்புறாவின்பெயர்—கபோதம் பாரா வதங் கரும் புறாவே ()

உகூடு௩. புறப்பொதுவின்பெயர்—தூதுணங் கபோதங் களரவம் புறாவே. (சு௨)

உகூடு௪. கவுதாரியின்பெயர்—சிரவங் கவுதாரி. (சுரு)

உகூடுடு. பகண்டையின்பெயர்—சில்லை பகண்டை. (சுசு)

உகூடுசு. நாகணவாய்ப்புள்ளின்பெயர்—பூவை சாரிகை நாகண வாய்ப் புள். (சுடு)

உகூடுஎ. கல்சிலையின்பெயர்—பல்லி யென்ப கல்சிலை யாகும். (சுசு)

உகூடுஅ. உள்ளான்பெயர்—உள்ள லென்பது வுள்ளா னாகும். (சுஎ)

உகூடுகூ. மாடப்புறாவின்பெயர்—கன்மேய்வு காளபதம் மாடப் புறாவே.

உகூசு0. தூக்கணங்குருவியின்பெயர்—சிதகஞ்சிந்தன் றூக்கணங்குருவி.

உகூசுக. இராகப்புள்ளின்பெயர்—மிதுனங் கின்னர மிராகப் புள்ளே. ()

உகூசு௨. தலையிலாக்குருவியின்பெயர்—மழைக்குயில் தலையிலாக் குருவி யாகும். (டுக)

உகூசு௩. சிச்சிலியின்பெயர்—சிரல்கவுதம் பொன்வாய்ப்புள் தித்திரி சிச்சிலி. (டு௨)

உகூசு௪. மீனெறிசிறுபறவையின்பெயர்—சிரலே மீனெறி சிறுபறவை யாகும். (டுரு)

உகூசுடு. ஊர்க்குருவியின்பெயர்—கலிங்கஞ்சகடங்குலிங்கமூர்க் குருவி.

உகூசுசு. மற்றுமூர்க்குருவியின்பெயர்—புலிங்க மென்றும் புகலப் பெறுமே. (டுடு)

உகூசுஎ. காகத்தின்பெயர்—கரடங் கொடிபலி புட்டங் காரி - வாயசங் கரும்பிள்ளை யரிட்டங் காகம். (டுசு)

உகூசுஅ. அண்டங்காக்கையின்பெயர்—காலோல மண்டங் காக்கை யாகும். (டுஎ)

உகூசுகூ. நீர்க்காக்கையின்பெயர்—அர்க்கமும் கரண்டமு நீர்க்காக்கை யாகும். (டுஅ)

உகூஎ0. செம்போத்தின்பெயர்—குக்கில்செம்போத்துச் சகோரமு மதற்கே. (டுகூ)

உகூஎக. சிவலின்பெயர்—கோரசம் புல்லோ டிதல்சிவ லாகும். (சு0)

உகூஎ௨. ஆந்தையின்பெயர்—இருடி பிங்கலை கின்னர மாந்தை. (சுக)

உகூஎ௩. பேராந்தையின்பெயர்—சகோரம் பேராந்தை தனக்குப் பெயரே. (சு௨)

உகூஎ௪. கொய்யடிநாரையின்பெயர்—குருகு வண்டானங் கொய்யடி நாரை. (சுரு)

௨௱௫௰௨. கரும்புறாவின்பெயர்—கபோதம், பாராவதம். (௨)

௨௱௫௰௩. புறப்பொதுவின்பெயர்—தூதுணம், கபோதம், களரவம். (௩)

௨௱௫௰௪. கவுதாரியின்பெயர்—சிரவம். (௧)

௨௱௫௰௫. பகண்டையின்பெயர்—சில்லை. (௧)

௨௱௫௰௬. நாகணவாய்ப்புள்ளின்பெயர்—பூவை, சாரிகை. (௨)

௨௱௫௰௭. கல்சிலையின்பெயர்—பல்லி. (௧)

௨௱௫௰௮. உள்ளான்பெயர்—உள்ளல். (௧)

௨௱௫௰௯. மாடப்புறாவின்பெயர்—கன்மேய்வு, காளபதம். (௨)

௨௱௬௰. தூக்கணங்குருவியின்பெயர்—சிதகம், சிந்தன். (௨)

௨௱௬௰௧. இராகப்புள்ளின்பெயர்—மிதுனம், கின்னரம். (௨)

௨௱௬௰௨. தலையிலாக்குருவியின்பெயர்—மழைக்குயில். (௧)

௨௱௬௰௩. சிச்சிலியின்பெயர்—சிரல், கவுதம், பொன்வாய்ப்புள், தித்திரி. (௪)

௨௱௬௰௪. மீன்எறிசிறுபறவையின்பெயர்—சிரல். (௧)

௨௱௬௰௫. ஊர்க்குருவியின்பெயர்—கலிங்கம், சகடம், குலிங்கம். (௩)

௨௱௬௰௬. மற்றுமூர்க்குருவியின்பெயர்—புலிங்கம். (௪)

௨௱௬௰௭. காகத்தின்பெயர்—கரடம், கொடி, பலிபுட்டம், காரி, வாயசம், கரும்பிள்ளை, அரிட்டம். (௭)

௨௱௬௰௮. அண்டங்காக்கையின்பெயர்—காலோலம். (௧)

௨௱௬௰௯. நீர்க்காக்கையின்பெயர்—அர்க்கம், கரண்டம். (௨)

௨௱௭௰. செம்போத்தின்பெயர்—குக்கில், சகோரம். (௨)

௨௱௭௰௧. சிவலின்பெயர்—கோரசம், புல், இதல். (௩)

௨௱௭௰௨. ஆந்தையின்பெயர்—இருடி, பிங்கலை, கின்னரம். (௩)

௨௱௭௰௩. பேராந்தையின்பெயர்—சகோரம். (௧)

௨௱௭௰௪. கொய்யடிநாரையின்பெயர்—குருகு, வண்டானம். (௨)

உ௱எடு. பெருநாரையின்பெயர்—பெருநாரை போதா பிதாவு மாகும்.

உ௱எசு. கருநாரையின்பெயர்—சிகரிகரு நாரையெனச் செப்பின்ரோ. (சுடு)

உ௱எஎ. வெண்ணாரையின்பெயர்—சாரசம் வெண்ணாரை யெனச் சாற்று வரே. (சுசு)

உ௱எஅ. கொக்கின்பெயர்—குரண்டமும் வலாகமும் பகமுங் கொக்கே.

உ௱எகூ. நீர்வாழ்பறவையின்பெயர்—உன்னங் கிராமமுற்கு ரோசங் - கின்னர நீர்ப்பற வைப்பெய ராகும். (சுஅ)

உ௱அ0. குருஞ்சிலின்பெயர்—ஆலாலந் துருஞ்சில். (சுகூ)

உ௱அக. வாவலின்பெயர்—அஞ்சலிகை வாவல். (எ0)

உ௱அஉ. வண்டின்பெயர்—அறுபத ஞிமிறளி யார்பதம் பிரமரஞ் - சிதரந் தேனே மந்தி சிலீமுகந் - தும்பி கரும்புள்சஞ் சாலிகங் கழுது - புண்ட ரீகஞ் சுரும்புசந் திரகஞ் - சூதங் கேசர மதுகரங் கீத - மாவரி சஞ்சரிகம் வடுவரி வண்டே. (எக)

உ௱அ௱. ஆண்வண்டின்பெயர்—சுரும்பு மதுகரந் தும்பியாண் வண்டே.

உ௱அச. தேனீயின்பெயர்—பிரச மதுகரஞ் சரகந் தேனீ. (எ௱)

உஉஅடு. ஈசலின்பெயர்—ஈசல் சிதலாம். (எச)

உ௱அசு. மின்மினியின்பெயர்—மின்மினிகச் சோதம். (எடு)

உ௱அஎ. சிள்வீட்டின்பெயர்—சில்லை செடி சில்லிகை சிமிலி சிள்வீடு. ()

உ௱அஅ. விட்டிற்பறவையின்பெயர்—பதங்கமுஞ் சலபமும் விட்டிற் பறவை. (எஎ)

உ௱அகூ. கொதுகின்பெயர்—நுளம்பே நிலம்பியு லங்கே கொதுகெனல்.

உ௱கூ0. மற்றுங்கொதுகின்பெயர்—அலகுஞ் சகலு நொள்ளலு மதற்கே. ()

உ௱கூக. சலகொதுகின்பெயர்—மசகந் துள்ளல் சலகொது காகும். (அ0)

உ௱கூஉ. நுளம்பின்பெயர்—அளுலமு ஞலவலு நொள்ளலு நுளம்பே. ()

உ௱கூ௱. புட்பொதுவின்பெயர்—பதங்கம் பக்கி பதகம் பத்திரி - விகங் கஞ் சகுந்தம் விகிரஞ் சகுனங் - குடிஞை பறவை குரீஇ வியமே - பிணிமுகங் ககமே போகில்புட் பொதுப்பெயர். (அஉ)

உ௱கூச. இறகின்பெயர்—பறையுஞ் சதனமும் பக்கமும் பிஞ்சமுஞ் - சிறையுந் தூவியுஞ் சிறகுந் தோகையுங் - கூழையுஞ் சதமுங் குரலுங் கூரலும் - வாசமும் பத்திரமு மிறையுமிற கின்பெயர். (அ௱)

உ௱கூடு. மற்றுமிறகின்பெயர்—ஈரீ கச்ச மென்ன லாகும். (அச)

உ௱கூசு. முட்டையின்பெயர்—அண்டஞ் சினைகோச மரிட்ட முட்டை.

உ௱கூஎ. வாயலகின்பெயர்—துண்டமுஞ் சுவவு மூக்கும் வா யலகே. ()

உ௱கூஅ. புள்ளின்மூக்கின்பெயர்—புள்ளின் மூக்குச் சுச்சுவெனப் புகலும்.

உ௬எ௫. பெருநாரையின்பெயர்—போதா, பிதா. (உ)

உ௬எ௬. கருநாரையின்பெயர்—சிகரி. (க)

உ௬எஎ. வெண்ணாரையின்பெயர்—சாரசம். (க)

உ௬எ௮. கொக்கின்பெயர்—குரண்டம், வலாகம், பகம். (௩)

உ௬எ௯. நீர்வாழ்பறவையின்பெயர்—உன்னம், கிராமம், உற்குரோசம், கின்னரம். (௪)

உ௬௮0. குருஞ்சிவின்பெயர்—ஆலாலம். (க)

உ௬௮க. வாவலின்பெயர்—அஞ்சலிகை. (க)

உ௬௮உ. வண்டின்பெயர்—அறுபதம், ஞிமிறு, அளி, ஆர்பதம், பிரமரம், சிதரம், தேன், மந்தி, சிலீமுகம், தும்பி, கரும்புள், சஞ்சாலிகம், கழுது, புண்டரீகம், சுரும்பு, சந்திரகம், சூதம், கேசரம், மதுகரம், கீதம், மா, அரி, சஞ்சரிகம், வடு, வரி. (உ௫)

உ௬௮௩. ஆண்வண்டின்பெயர்—சுரும்பு, மதுகரம், தும்பி. (௩)

உ௬௮௪. தேனீயின்பெயர்—பிரசம், மதுகரம். சரகம். (௩)

உ௬௮௫. ஈசலின்பெயர்—சிதல். (க)

உ௬௮௬. மின்மினியின்பெயர்—கச்சோதம். (க

உ௬௮எ. சிள்வீட்டின்பெயர்—சில்லை, நெடி, சில்லிகை, சிமிலி. (௪)

உ௬௮௮. விட்டிற்பறவையின்பெயர்—பதங்கம், சலபம். (உ)

உ௬௮௯. கொதுகின்பெயர்—நுளம்பு, நிலம்பி, உலங்கு. (௩)

உ௬௯0. மற்றுங்கொதுகின்பெயர்—அலகு, சகல், நொள்ளல். (௩)

உ௬௯க. சலகொதுகின்பெயர்—மசகம், துள்ளல். (உ)

உ௬௯உ. நுளம்பின்பெயர்—அஞுலம், ஞலவல், நொளளல். (௩)

உ௬௯௩. புட்பொதுவின்பெயர்—பதங்கம், பக்கி, பதகம், பத்திரி, விகங்கம், சகுந்தம், விகிரம், சகுனம், குடிஞை, பறவை, குரீஇ, வியம், பிணிமுகம், ககம், போகில். (க௫)

உ௬௯௪. இறகின்பெயர்—பறை, சதனம், பக்கம், பிஞ்சம், சிறை, தூவி, சிறகு, தோகை, கூழை, சதம், குரல், கூரல், வாசம், பத்திரம், இறை. (க௫)

உ௬௯௫. மற்றுமிறகின்பெயர்—ஈர், ஈ, கச்சம், ஆட (க௮)

உ௬௯௬. முட்டையின்பெயர்—அண்டம், சினை, கோசம், அரிட்டம். (௪)

உ௬௯எ. வாயலகின்பெயர்—துண்டம், சுவவு, மூக்கு. (௩)

உ௬௯௮. புள்ளின்மூக்கின்பெயர்—சுச்சு. (க)

உ௩௯௯. புட்சிறகடித்துப்புடைத்துக்கூப்பிடுதலின்பெயர்—புட்சிற கடித்துப் புடைத்துக் கூப்பிட - லோசனித்த லென்ப தாகும். (அஅ)

உ௪௦௦. எழாலுமயிலுமொழிந்தபறவையினாண்பெயர்—எழான்மயிலொழிந்த வேனைப் பறவைகள் - வழாஅ வாணின் பெயர்சேவ லாகும். (அகூ)

உ௪௦க. மயிலெழாலென்னுமிரண்டினுண்பெயர்—மயிலுமெழாலு மாண் பெயர் மரபு - புகலுங் காலைப் போத்தென வாகும். (கூ௦)

உ௪௦உ. கோழிகூகைகளின்பெண்பெயர்—* கோழியுங் கூகையு மல்லாப் பெண்பெய - ராயுங் காலையள கெனற்கமையா. (கூக)

உ௪௦௩. மற்றும்அவ்வளகென்னும்யெயர்—அப்பெயர்க் கிளவி மயிற்குமாகும். (கூஉ)

உ௪௦௪. புள்ளின்பெண்பெயர்—பேடை பெடை பெட்டை புள்ளின் பெண்பெயர். (கூ௩)

உ௪௦௫. பறவைக்குஞ்சின்பெயர்—பிள்ளையும் பார்ப்புங் குஞ்சின் பெயரே. (கூ௪)

உ௪௦௬. பறவைக்குரலின்பெயர்—குரலது புகலிற் பயிரா கும்மே. (கூ௫)

உ௪௦எ. புட்கூட்டத்தின்பெயர்—தொழுதி புட்கூட்டம். (கூ௬)

உ௪௦அ. புட்கூட்டத்தோசையின்பெயர்—துழனி யோசை. (கூஎ)

உ - விலங்கின்வகை. (கூஅ)

உ௪௦கூ. சிங்கத்தின்பெயர்—ஆளி வாளரி யரிமிரு காபதி - கோளரி கண்டீ ரவம்பஞ் சானனஞ் - சியமடங்கல் கேசரி முடங்குளை அரிமா - வயப்போத்துப்பஞ்ச நகாயுதம் - வயமா வயப்புலி சிங்கப் பெயரே. (கூகூ)

உ௪க௦. யானையாளியின்பெயர்—அறுகை பூட்கை யானை யாளிப்பெயர்.

உ௪கக. புலியின்பெயர்—வியாக்கிரம் வேங்கை வியாளம் பாய்மா - தரக்குச் சித்திர காயஞ்சார்த் தூலம் - வயவரி புண்ட ரீகம் வல்லியங் - கொடுவரி யுழுவை குயவரி வயமா - புல்லுத் தீவி புலியின் பெயரே. (க௦௦)

உ௪கஉ. யானையின்பெயர்—தும்பி கரிணி தோல்சுண் டாலி - கும்பி கறையடி குஞ்சரம் பகடு - களிறு பூட்கை கரிமா தங்கம் - வழுவை வேழம் வாரண மொய்யே - யும்ப லெறும்பி யுவாவே பொங்கடி-தந்தி யத்தி கடிவை கயமே - நாகஞ் சிந்துரந் தூங்க ணிருமதம்-புழைக்கை வல்விலங்கு நால்வாய் புகர் முகம் - மதாவளந் தந்தா வளமருண் மாவே - கைம்மாப் பெருமா மதமா வயமா - மந்த மாவே மதகய மாம்ப - விபமே போதகங் களபம்யா னைப் பெயர். (க௦க)

---

* அடியில்வருஞ்சூத்திரத்தால், அளகெனற்குரிய என்னும் பாடத்தை அளகெனற் கமையா எனக்கொண்டாம். தொல்காப்பியம் பொருள்-மரபியலில் "கோழி கூகை யாயிரண்டல்லவை சூழுங்காலையள கெனவமையா-அப்பெயர்க் கிளவிமயிற்குமாகும்" எனவருஞ்சூத்திரங்களாலுங் காண்க.

உ௬௯௯. புட்சிறகடித்துப்புடைத்துக்கூப்பிடுதலின்பெயர்— ஓசனித்தல்.

உ௪0௦. எழாலுமயிலுமொழிந்தபறவையினாண்பெயர்—சேவல். (௧)

உ௪0௧. மயிலெழாலென்னுமிரண்டினாண்பெயர்—போத்து. (௧)

உ௪0௨. கோழிகூகைகளின்பெண்பெயர்—அளகு. (௧)

உ௪0௩. மற்றும்அவ்வளகென்னும்பெயர்—மயில். (௧)

உ௪0௪. புள்ளின்பெண்பெயர்—பேடை, பெடை, பெட்டை. (௩)

உ௪0௫. பறவைக்குஞ்சின்பெயர்—பிள்ளை, பார்ப்பு. (௨)

உ௪0௬. பறவைக்குரலின்பெயர்—பயிர். (௧)

உ௪0௭. புட்கூட்டத்தின்பெயர்—தொழுதி. (௧)

உ௪0௮. புட்கூட்டத்தோசையின்பெயர்—துழனி. (௧)

விலங்கின்வகை

உ௪0௯. சிங்கத்தின்பெயர்—ஆளி, வாளரி, அரி, மிருகாபதி, கோளரி, கண்டீரவம், பஞ்சானனம், சியம், மடங்கல், கேசரி, முடங்குளை, அரிமா, வயப்போத்து, பஞ்சநகாயுதம், வயமா, வயப்புலி. ௧௬

உ௪௧0. யானையாளியின்பெயர்—அறுகு, பூட்கை. (௨)

உ௪௧௧. புலியின்பெயர்—வியாக்கிரம், வேங்கை, வியாளம், பாய்மா, தரக்கு, சித்திரகாயம், சார்த்தூலம், வயவரி, புண்டரீகம், வல்லியம், கொடுவரி, உழுவை, குயவரி, வயமா, புல், நிவி. (௧௬)

உ௪௧௨. யானையின்பெயர்—தும்பி, கரிணி, தோல், சுண்டாலி, கும்பி, நறையடி, குஞ்சரம், பகடு, களிறு, பூட்கை, கரி, மாதங்கம், வழுவை, வேழம், வாரணம், மொய், உம்பல், எறும்பி, உவா, பொங்கடி, தந்தி, அத்தி, கடிவை கயம், நாகம், சிந்துரம், தூங்கல், நிருமதம், புழைக்கை, வல்விலங்கு, நால்வாய், புகர்முகம், மதாவளம், தந்தாவளம், மருண்மா, கைம்மா, பெருமா, மதமா, வயமா, மந்தமா, மதகயம், ஆம்பல், இபம், போதகம், களபம். (௪௫)

உ௪௧௩. மதயானையின்பெயர்—மதகரி தந்தி களிறு மதயானை. (௧௦௨)

உ௪௧௪. உதவிசெய்யானையின்பெயர்—உதவி செய்யானை யூத நாதன்.

உ௪௧௫. பெண்யானையின்பெயர்—அத்தினி கரிணி வடவை பிடிபெண் யானை. (௧௦௪)

உ௪௧௬. யானைக்கன்றின்பெயர்—கயந்தலை போதகங் துடியடி களபங் - கயமுனி யானைக் கன்று கும்மே. (௧௦௫)

உ௪௧௭. யானைநுதலின்பெயர்—மதகமுங் கும்பமு மத்தகமு நுதலே. ()

உ௪௧௮. யானைத்துதிக்கையின்பெயர்—தொண்டை தொண்டலஞ் சுண்டை துதிக்கை. (௧௦௭)

உ௪௧௯. யானைக்கைந்நுனியின்பெயர்—கைந்நுனி புட்கரம். (௧௦௮)

உ௪௨௦. யானைக்கடைக்கண்ணின்பெயர்—கடைக் கண்ணிரி யாணம்.()

உ௪௨௧. யானைக்கொம்பின்பெயர்—தந்த மெயிறுகோடு மருப்புக் கொம்பே. (௧௧௦)

உ௪௨௨. யானைக்கொம்பினடுப்பெயர்—பிருதி மானங் கொம்பினடுவென்ப. (௧௧௧)

உ௪௨௩. யானைமுன்காலின்பெயர்—காத்திர முன்கால். (௧௧௨)

உ௪௨௪. யானைப்பின்காலின்பெயர்—அபரம் பின்கால். (௧௧௩)

உ௪௨௫. யானைமுதுகின்பெயர்—முதுகு மஞ்சாகும். (௧௧௪)

உ௪௨௬. யானைமத்தகத்தின்பெயர்—மத்தகம தோற்கடம். (௧௧௫)

உ௪௨௭. யானைவாலின்பெயர்—வாறுல வட்டம். (௧௧௬)

உ௪௨௮. யானைவானுனியின்பெயர்—வானுனி வேசகம். (௧௧௭)

உ௪௨௯. யானைவாற்கீழிடத்தின்பெயர்—வெருகம்வாற் கீழிடம். (௧௧௮)

உ௪௩௦. யானைச்செவியின்பெயர்—செவிகன்னந் தாலம். (௧௧௯)

உ௪௩௧. யானைநடுச்செவியின்பெயர்—வட்ட நடுச்செவி. (௧௨௦)

உ௪௩௨. யானைச்செவியடியின்பெயர்—சூளிகை செவியடி. (௧௨௧)

உ௪௩௩. யானைவாயின்பெயர்—தளவு வாயெனல். (௧௨௨)

உ௪௩௪. யானைமதச்சுவட்டின்பெயர்—கடமே கொடிறு கரட மதச்சுவடு. (௧௨௩)

உ௪௩௫. யானையுமிழ்நீரின்பெயர்—உமிழ் நீர் விலாழி. (௧௨௪)

உ௪௩௬. யானைப்பல்லடியின்பெயர்—சீரம் பல்லடி. (௧௨௫)

உ௪௩௭. யானைமதத்தின்பெயர்—மதங்கடம் தானங் கடாமு மாகும். ()

உ௪௩௮. யானைத்தோட்டியின்பெயர்—அங்குசந் தோட்டி. (௧௨௭)

உ௪௩௯. யானைப்பிடரின்பெயர்—இயாதம் பிடரே. (௧௨௮)

உ௪௪௦. யானைப்புகர்முகத்தின்பெயர்—புகர் முகஞ் சிந்தூரம். (௧௨௯)

உசகரு. மதயானையின்பெயர்—மதகரி, தந்தி, களிறு. (க)

உசகச. உதவிசெய்யானையின்பெயர்—யூதநாதன். (க)

உசகரு. பெண்யானையின்பெயர்—அத்தினி, கரிணி, வடவை, பிடி. (ச)

உசகசு. யானைக்கன்றின்பெயர்—கயந்தலை, போதகம், துடியடி, களபம், கயமுனி. (ரு)

உசகஎ. யானைநுதலின்பெயர்—மதகம். கும்பம், மத்தகம். (ங)

உசகஅ. யானைத்துதிக்கையின்பெயர்—தொண்டை, தொண்டலம், சுண்டை. (க)

உசகக. யானைக்கைந்நுனியின்பெயர்—புட்கரம். (க)

உசஉ0. யானைக்கடைக்கண்ணின்பெயர்—நிரியாணம். (க)

உசஉக. யானைக்கொம்பின்பெயர்—தந்தம், எயிறு, கோடு, மருப்பு. (ச)

உசஉஉ. யானைக்கொம்பினடுப்பெயர்—பிருதுமானம். (க)

உசஉங. யானைமுன்காலின்பெயர்—காத்திரம். (க)

உசஉச. யானைப்பின்காலின்பெயர்—அபரம். (க)

உசஉரு. யானைமுதுகின்பெயர்—மஞ்சு. (க)

உசஉசு. யானைமத்தகத்தின்பெயர்—மதோற்கடம். (க)

உசஉஎ. யானைவாலின்பெயர்—தாலவட்டம். (க)

உசஉஅ. யானைவானுனியின்பெயர்—வேசகம். (க)

உசஉக. யானைவாற்கீழிடத்தின்பெயர்—வெருகம். (க)

உசங0. யானைச்செவியின்பெயர்—கன்னம்- தாலம். (உ)

எசஙக. யானைநடுச்செவியின்பெயர்—வட்டம். (க)

உசஙஉ. யானைச்செவியடியின்பெயர்—சூளிகை. (க)

உசஙங. யானைவாயின்பெயர்—தளவு. (க)

உசஙச. யானைமதச்சுவட்டின்பெயர்—கடம், கொடிறு, கரடம். (ங)

உசஙரு. யானையுமிழ்நீரின்பெயர்—விலாழி. (க)

உசஙசு. யானைப்பல்லடியின்பெயர்—கரீரம். (க)

உசஙஎ. யானைமதத்தின்பெயர்—கடம், தானம், கடாம். (ங)

உசஙஅ. யானைத்தோட்டியின்பெயர்—அங்குசம். (க)

உசஙக. யானைப்பிடரின்பெயர்—இயாதம். (க)

உசச0. யானைப்புகர்முகத்தின்பெயர்—சிந்துரம். (க)

உசசக. யானைநுதலணிசிந்தூரத்தின்பெயர்—நுதலணி சிந்தூரஞ் சாமோற் பலமே. (கங0)

உசசஉ. யானைமேற்றவிசின்பெயர்—யானை மேற்ற விசிலகட மாகும். ()

உசசங. யானைநோயின்பெயர்—பாகலம் யானை நோய். (கஙஉ)

உசசச. யானைபடுகுழியின்பெயர்—படுகுழி பயம்பாம். (கஙங)

உசசரு. யானைபடுக்குமிடத்தின்பெயர்—படுக்கு மிடம் வாரி. (கஙச)

உசசசு. யானைநுதற்பட்டத்தின்பெயர்—பட்ட மோடை. (கஙரு)

உசசஎ. யானைத்திரளின்பெயர்—கடகம் யானைத்திரட்பெயர்க் கட்டுரை.

உசசஅ. பிறந்தநிலப்பெயரைப்பெற்றயானைபெறும்பெயராவன—கிரிசரம் வநசர நதிசர மடுத்துப - பெறுமே யானை பிறந்த நிலப்பெயர். (கஙஎ)

உசசகூ. குதிரையின்பெயர்—பரியே பாடலம் பாய்மா புரவி - யரிகனவட்ட மத்திரி கோரம் - வாசி துரங்க மாவே கந்துகந் - தூசி யிவுளி துரகந் துரகதம் - கோடகஞ் சயிந்தவங் கோணங் குரகதங் - கந்தருவங் கிள்ளை மண்டிலங் கற்கி - யச்சுவ முன்னி யயமே கொக்குக்- கொய்யுளை சடிலங் குந்தங் கணுகங் - கோடை வயமா குதிரையின் பெயரே. (கஙஅ)

உசரு0. பாண்டியன்குதிரையின்பெயர்—அவற்றுள்-கனவட்ட மென்பது வழுதி யூர்மா. (கஙகூ)

உசருக. சோழன்குதிரைப்பெயர்—கோர மென்பது சோழ னூர்மா. ()

உசருஉ. சேரன்குதிரைப்பெயர்—பாடல மென்பது சேர னூர்மா. ()

உசருங. குறுநிலமன்னர்குதிரையின்பெயர்—கந்துகங் குறுநில மன்னரூர்மா. (கசஉ)

உசருச. குதிரைமயிரின்பெயர்—சுவல்குசை கூந்தல் மேசக மயிரே. ()

உசருரு. குதிரைக்குளம்பின்பெயர்—குரமுங் குரச்சையுங் குரசுங் குளம்பே. (கசச)

உசருசு. குதிரைபோமார்க்கத்தின்பெயர்—மாதிக மதுபோ மார்க்க மாகும். (கசரு)

உசருஎ. குதிரைவாலின்பெயர்—வாலதி தோகை வால தாகும். (கசசு)

உசருஅ. பசுவின்பெயர்—கோவே பெற்றங் நிரைகுடஞ் சுட்டுத் - தேனுசுரை பத்திரை கபிலை சேதா - வாவே சுரபி யான்பசு வாகும். (கசஎ)

உசருகூ. தெய்வப்பசுவின்பெயர்—தேனுவுங் கபிலையுந் தெய்வப் பசுவே.

உசசு0. நற்பசுவின்பெயர்—பத்திரை நற்பசு. (கசகூ)

உசசுக. குணமில்லாப்பசுவின்பெயர்—சுதைகுண மிலாப் பசு. (கரு0)

உசசுஉ. ஓரீற்றுப்பசுவின்பெயர்—கிட்டியோ ரீற்றுப் பசு. (கருக)

உசசுங. மலட்டுப்பசுவின்பெயர்—வற்சை மலட்டுப் பசு. (கருஉ)

உசசக. யானைநுதலணிசிந்தூரத்தின்பெயர்—சாமோற்பலம். (க)

உசசஉ. யானைமேற்றவிசின்பெயர்—இலகடம். (க)

உசசங. யானைநோயின்பெயர்—பாகலம். (க)

உசசச. யானைபடுகுழியின்பெயர்—பயம்பு. (க)

உசசரு. யானைபடுக்குமிடத்தின்பெயர்—வாரி. (க)

உசசசு. யானைநுதற்பட்டத்தின்பெயர்—ஓடை. (க)

உசசஎ. யானைத்திரளின்பெயர்—கடகம். (க)

உசசஅ. பிறந்தநிலப்பெயரைப்பெற்ற யானைபெறும்பெயராவன—கிரிசகம், வநசரம், நதிசரம். (ங)

உசசகூ. குதிரையின்பெயர்—பரி, பாடலம், பாய்மா, புரவி, அரி, கனவட்டம், அத்திரி, கோரம, வாசி, துரங்கம், மா, கந்துகம், தூசி, இவுளி, துரகம், துரகதம், கோடகம், சயிந்தவம், கோணம், குரகதம், கந்தருவம், கிளிளைமண்டிலம், கற்கி, அச்சுவம், உன்னி, அயம், கொக்கு, கொய்யுளை, சடிலம், குரங்கம், கன்னுகம், கோடை, வயமா. (கூச)

உசரு०. பாண்டியன்குதிரையின்பெயர்—கனவட்டம். (க)

உசருக. சோழன்குதிரையின்பெயர்—கோரம். (க)

உசருஉ. சேரன்குதிரையின்பெயர்—பாடலம். (க)

உசருங. குறுநிலமன்னர்குதிரையின்பெயர்—கந்துகம். (க)

உசருச. குதிரைமயிரின்பெயர்—சுவல், குசை, கூந்தல், மேசகம். (ச)

உசருரு. குதிரைக்குளம்பின்பெயர்—குரம், குரச்சை, குரசு. (ங)

உசருசு. குதிரைபோமார்க்கத்தின்பெயர்—மாதிகம். (க)

உசருஎ. குதிரைவாலின்பெயர்—வாலதி, தோகை. (உ)

உசருஅ. பசுவின்பெயர்—கோ, பெற்றம், நிரை, குடஞ், சுட்டு, தேனு, சுரை, பத்திரை, கபிலை, சேதா, ஆ, சுரபி, ஆன். (கஉ)

உசருகூ. தெய்வப்பசுவின்பெயர்—தேனு, கபிலை. (உ)

உசசு०. நற்பசுவின்பெயர்—பத்திரை (க)

உசசுக. குணமில்லாப்பசுவின்பெயர்—சுதை. (க)

உசசுஉ. ஓரீற்றுப்பசுவின்பெயர்—கிட்டி. (க)

உசசுங. மலட்டுப்பசுவின்பெயர்—வற்சை. (க)

உசசுச. கன்றைவளர்க்கும்பசுவின்பெயர்—வற்சலங் கன்றைவளர்க்கும் பசுவே. (கருக)

உசசுரு. பசுவின்முலைப்பெயர்—சுரைமுலை யென்ப. (கருச)

உசசுசு. பசுக்கோட்டத்தின்பெயர்—பசுநிலைகோட்டம். (கருரு)

உசசுஎ. மடியின்பெயர்—செருத்த லாபீன மடியென வகுப்பர். ()

உசசுஅ. பசுவின்கன்றின்பெயர்—தன்னம் வற்சந்தனம் பசுவின்கன்றே.

உசசுக. பசுக்கூட்டத்தின்பெயர்—காலிநிரைதொறுகதுப்புக் காலேயம் பசுக்கூட்டம். (கருஅ)

உசஎ0. எருதின்பெயர்—பாறல் சேவிடை பாண்டில் பெற்றம்- பூணி குண்டை புல்லங் காளை-யிறலே கொட்டியமூரி யெருதெனல். (கருக)

உசஎக. எற்றின்பெயர்—குத்தமும்விடபமுங் கூளியு நந்தியு-முக்கமு மிடபமு மேறென வுரைப்பர். (கசு0)

உசஎஉ. பேரெருதின்பெயர்—பகடு தூரியம் பாறல்பே ரெருதே. (கசுக)

உசஎங. பொதியெருதின்பெயர்—தூரியந் தூர்வகம்பொதியெருதாகும்.

உசஎச. எருதின்முரிப்பின்பெயர்—இமிலே யேற்றின் றிரண்முரிப் பாகும். (கசுங)

உசஎரு. பொலியெருதின்பெயர்—ஏறு கூளி யிடபம் பொலி யெருதே.

உசஎசு. எருமையின்பெயர்—காரான் மகிடங் கவரி காரா-காசாச் சைரி பம் வடவை கயவாய்-மேதி யெருமை மூரியு மாகும். (கசுரு)

உசஎஎ. எருமைப்போத்தின்பெயர்—பகடெங்கடாவு மவற்றின்போத்தாம்.

உசஎஅ. மலட்டெருமையின்பெயர்—மைமை யென்பதுமலட்டெருமை ப்பெயர். (கசுஎ)

உசஎக. ஆட்டின்பொதுப்பெயர்—அருணங் கொச்சை துருவை மேழக மசமுத வெள்ளன் மறிமை வெறிகொறி - புருவை சாகமாட்டின் பொதுப்பெ யர். (கசுஅ)

உசஅ0 செம்மறியாட்டின்பெயர்—உதள்கொறி துருவை யொரு வேபு ருவை - யருண மேடஞ் செம்ம றியா டென்ப. (கசுக)

உசஅக. துருவாட்டின்பெயர்—துருவை கொறி மைதுருவாடாகும். ()

உசஅஉ. துருவாட்டேற்றின்பெயர்—மேழகங் கம்பளந் தகரே திண்ண கம் - ஏழகங் கடாதுருவாட்டி னேறே. (கஎச)

உசஅங. ஆட்டுக்குட்டியின்பெயர்—குட்டன் சோரன் மறிபறழ்குட்டி. ()

உசஅச. வெள்ளாட்டின்பெயர்—வெள்ளை வற்காலி கொச்சை வெள்ளா டே. (எஎங)

உசசுச. கன்றைவளர்க்கும்பசுவின்பெயர்—வற்சலம். (க)

உசசுரு. பசுவின்முலையின்பெயர்—சுரை. (க)

உசுசுசு. பசுக்கோட்டத்தின்பெயர்—பசுநிலை. (க)

உசசுஎ. மடியின்பெயர்—செருத்தல், ஆபீனம். (உ)

உசசுஅ. பசுவின்கன்றின்பெயர்—தன்னம், வற்சம், தனம். (ரு)

உசசுகூ. பசுக்கூட்டத்தின்பெயர்—காலி, நிரை, தொறு, கதுப்பு, காலேயம். (ரு)

உசஎ0. எருதின்பெயர்—பாறல், சே, விடை, பாண்டில், பெற்றம், பூணி, குண்டை, புல்லம், காளை, இறால், கொட்டியம், மூரி. (கஉ)

உசஎக. ஏற்றின்பெயர்—குத்தம், விடபம், கூளி, நந்தி, உக்கம், இடபம். (சு)

உசஎஉ. பேரெருதின்பெயர்—பகடு, தூரியம், பாறல். (ரு)

உசஎரு. பொதியெருதின்பெயர்—தூரியம், தூர்வகம். (உ)

உசஎச. எருதின்முரிப்பின்பெயர்—இமில். (க)

உசஎரு. பொலியெருதின்பெயர்—ஏறு, கூளி, இடபம். (ரு)

உசஎசு. எருமையின்பெயர்—காரான், மகிடம் கவரி, காரா, காசா, சைரிபம், வடவை, கயவாய், மேதி, மூரி. (க0)

உசஎஎ. எருமைப்போத்தின்பெயர்—பகடு, கடா. (உ)

உசஎஅ. மலட்டெருமையின்பெயர்—மைம்மை. (க)

உசஎகூ. ஆட்டின்பொதுப்பெயர்—அருணம், கொச்சை, துருவை, மேழகம், அசம், உதள், துள்ளல், மறி, மை, வெறி, கொறி, புருவை, சாகம். (கரு)

உசஅ0. செம்மறியாட்டின்பெயர்—உதள், கொறி, துருவை, ஒருவு புருவை, அருணம், மேடம். (எ)

உசஅக. துருவாட்டின்பெயர்—துருவை, கொறி, மை. (ரு)

உசஅஉ. துருவாட்டேற்றின்பெயர்—மேழகம், கம்பளம், தகர், திண்ணகம், ஏழகம், கடா. (சு)

உசஅரு. ஆட்டுக்குட்டியின்பெயர்—குட்டன், சோரன், மறி, பறழ். (ச)

உசஅச. வெள்ளாட்டின்பெயர்—வெள்ளை, வற்காலி, கொச்சை. (ரு)

உசஅரு. வெள்ளாட்டேற்றின்பெயர்—மேடஞ் செச்சைசாக மோத்தை-யசமைகடாவெள்ளை யாட்டினேறே. (கஎச)

உசஅசு. வெள்ளாட்டுமறியின்பெயர்—வெள்ளை யென்பது மறிக்கு மாகும். (கஎரு)

உசஅஎ. பள்ளையாட்டின்பெயர்—வெள்ளை வற்காலி பள்ளையாடே. (கஎசு)

உசஅஅ. வரையாட்டின்பெயர்—வருடை சரபம் வரையா டாகும். (கஎஎ)

உசஅக. காட்டாவின்பெயர்—ஆமாகவையமா காட்டாவாகும். (கஎஅ)

உசகo. மரையின்பெயர்—ஆவிதங் கானக் குதிரைமரை யாகும். (கஎக)

உசகக. ஒட்டகத்தின்பெயர்—அத்திரி நெடுங்கழுத்தறு சேரகங் கனகதம் - அயவண மிரவண மொட்டகமாகும். (கஅo)

உசகஉ. கழுதையின்பெயர்—வேசரி கோகு கரம்வாலேபங் - காளவாயே கர்த்தபங் கழுதை. (கஅக)

உசகங. கோவேறுகழுதையின்பெயர்—வேசரி யத்திரி கோவேறு கழுதை. (கஅஉ)

உசகச. கரடியின்பெயர்—பல்லூக மெண்கு உளியம் பல்ல-மிளிறு மெலுவுங் குடாவடியுங் கரடி. (கஅங)

உசகரு. கவரிமாவின்பெயர்—எகின மானமா பட்டங் கவரிமா. (கஅச)

உசகசு. சவரியின்பெயர்—ஆகு கவரி சிகரஞ் சவரி. (கஅரு)

உசகஎ. மற்றுஞ்சவரியின்பெயர்—சாமரம் வெண்மயிருஞ் சவரியாகும்.

உசகஅ. மானின்பெயர்—அரிண நவ்விகுரங்கஞ் சாரங்க மறியுழை குரனம் மேணம் பிணை மானின்பெயர். (கஅஎ)

உசகக. மானேற்றின்பெயர்—இரலை வச்சய மவற்றி னேறே. (கஅஅ)

உருoo. மற்றும்மானேற்றின்பெயர்—கலைகரு மானென வரும னதற்கே. (கஅக)

உருoக. புல்வாயின்பெயர்—இரலை புல்வா யென்னலாகும். (ககo)

உருoஉ. பன்றியின்பெயர்—கேழல் சூரோடங் கிரிகிடி கிருட்டி - மோழல் வராகம் போத்திரி கோல- மெறுழி வல்லுளி யேனஞ் சூகரங்- கனலி யிருளி கருமா கோணி - போழ்முக மரிமைம்மாகளிறுபன்றி. (ககக)

உருoங. முட்பன்றியின்பெயர்—சல்லியமுளவு மெய்யே முண்மா. ()

உரு ச. மற்றுமுண்மாவின்பெயர்—சல்லக முட்பன்றி நாமமாகும். ()

உருoரு. முட்பன்றிமுள்ளின்பெயர்—சல்லமுஞ் சலமு மவற்றின் முள்ளின்பெயர். (ககச)

உருoசு. குரங்கின்பெயர்—வலிமுகங் கவியே மர்க்கடமரியே - வானரங் கோடரங் கீசகங் கோலம்-பிலவங்கந் தோரணமந்தி யூக - நிரந்தர நாகங் குரங்கின் பெயரே. (ககரு)

உசஅரு. வெள்ளாட்டாணின்பெயர்—மேடம், செச்சை, சாகம், மோத்தை, அசம், மை, கடா. (எ)

உசஅசு. வெள்ளாட்டுமறியின்பெயர்—வெள்ளை, (க)

உசஅஎ. பள்ளையாட்டின்பெயர்—வெள்ளை, வற்காலி. (உ)

உசஅஅ. வரையாட்டின்பெயர்—வருடை, சரபம். (உ)

உசஅகூ. காட்டாவின்பெயர்—ஆமா, கவையமா. (உ)

உசகூ0. மரையின்பெயர்—ஆவிதம், கானக்குதிரை. (உ)

உசகூக. ஒட்டகத்தின்பெயர்—அத்திரி, நெடுங்கழுத்தல், தாசேரகம், கனகதம், அயவாணம். இரவணம். (சு)

உசகூஉ. கழுதையின்பெயர்—வேசரி கோகு, கரம், வாலேபம், காளவாய், கர்த்தபம். (சு)

உசகூங. கோவேறுகழுதையின்பெயர்—வேசரி, அததிரி. (உ)

உசகூச. கரடியின்பெயர்—பல்லூகம், எண்கு, உளியம், பல்லம், மிளிறு, எலு, குடாவடி. (எ)

உசகூரு. கவரிமாவின்பெயர்—எகினம், மானமா, பட்டம். (ங)

உசகூசு. சவரியின்பெயர்—ஆகு, கவரி, சீகரம். (ங)

உசகூஎ. மற்றுஞ்சவரியின்பெயர்—சாமரம், வெண்மயிர். ஆ (ரு)

உசகூஅ. மானின்பெயர்—அரிணம், நவ்வி, குரங்கம், சாரங்கம், மறி, உழை, சுணம், எணம், பிணை. (கூ)

உசகூகூ. மானேற்றின்பெயர்—இரலை, வச்சயம். (உ)

உரு00. மற்றும்மானேற்றிபெயர்—கலை, கருமான். (ச)

உரு0க. புல்வாயின்பெயர்—இரலை. (க)

உரு0உ. பன்றியின்பெயர்—கேழல், குரோடம், கிரி, கிடி, கிருட்டி, மோழல், வராகம், போத்திரி, கோலம், எறுழி, வல்லுளி, எனம், சூகரம், கனலி, இருளி, கருமா, கோணி, போழ்முகம், அரி, மைம்மா, களிறு. (உக)

உரு0ங. முட்பன்றியின்பெயர்—சல்லியம், முளவு, எய், முண்மா. (ச)

உரு0ச. மற்றுமுண்மாவின்பெயர்—சல்லகம். (ரு)

உரு0ரு. முட்பன்றிமுள்ளின்பெயர்—சல்லம், சலம். (உ)

உரு0சு. குரங்கின்பெயர்—வலிமுகம், கவி, மர்க்கடம், அரி, வானரம், கோடரம், கீசகம், கோலம், பிலவங்கம், தோரணம், மந்தி, யூகம், நிரந்தரம், நாகம், (கச)

உ௫௦எ. பெண்குரங்கின்பெயர்—மந்தி யூக மற்றதன் பெண்பெயர். ()

உ௫௦அ. கருங்குரங்கின்பெயர்—காருகம் யூகங் கருங்குரங் கின்பெயர்.

உ௫௦௯. முசுவின்பெயர்—ஓரியுங் கலையுங் கள்வனு முசுவே. (௧௯௮)

உ௫௧௦. மற்றும்முசுவின்பெயர்—கோலாங் கூலமைம் முகனுமதற்கே.

உ௫௧௧. நாயின்பெயர்—ஞமலி யுச்சி யெகினங் குக்கன்-கூரன் சூரன்சார மேயன் - சுனகன்புரோகதி குறாமுகன் ஞாளி - சுணங்கன் முடுவல் பாட்டி சுவாவே - பாசியிவை நாயின் பெயரெனப் பகரும். (உ௦௦)

உ௫௧உ. பெண்ணாயின்பெயர்—முடுவல் பெண்ணாயாகமொழிப. (உ௦௧)

உ௫௧௩. செந்நாயின்பெயர்—விருகமுங் கொக்கு மண்டிகமுஞ் செந்நாய்.

உ௫௧௪. முயலின்பெயர்—சசமும் வயமு முயலா கும்மே. (உ௦௩)

உ௫௧௫. நரியின்பெயர்—ஓரி யிகல னூளன் சம்பு - செந்து குரோட்டங் கோமாயுச் சிருகால-ஞெண்டன் பூரிமாயு நரியின்பெயரே. (உ௦௪)

உ௫௧௬. முதுநரியின்பெயர்—முதுநரி யிகலன் கோமாயு வோரி. (உ௦௫)

உ௫௧எ. கொம்பிலாமிருகத்தின்பெயர்—குமர மென்பது கொம்பிலா மிருகம். (உ௦௬)

உ௫௧அ. பூனையின்பெயர்—வெருகு மண்டலி யிற்புலி விலாளம் - பவன மோதிமார்ச் சாலம் பாக்கன்-பூசை யலவன் விடருகம் பூனை. (உ௦எ)

உ௫௧௯. காட்டுப்பூனையின்பெயர்—கான்புலி மண்டலி பாக்கன் கான் பூனை. (உ௦அ)

உ௫உ௦. ஆண்பூனையின்பெயர்—விலாளமுங் கடுவனும் வெருகு மாண் பூனை. (உ௦௯)

உ௫உ௧. அழுங்கின்பெயர்—பளிங்கு மறியு மழுங்கா கும்மே. (உ௧௦)

உ௫உஉ. அழுங்கின்குருளையின்பெயர்—மற்றிதன் குருளை மறியென லாகும் (உ௧௧)

உ௫உ௩. நாவியின்பெயர்—மறுவி மிருகமத நாவி யாகும். (உ௧உ)

உ௫உ௪. கத்தூரியின்பெயர்—மான்மதங் துருக்க நரந்த நானங் கத்தூரி.

உ௫உ௫. கீரியின்பெயர்—நகுலங் காத்திரி தீர்வையுங்கீரி. (உ௧௪)

உ௫உ௬. உடும்பின்பெயர்—முசலிகை கோதா தடியுடும் பாகும். (உ௧௫)

உ௫உஎ. அணிலின்பெயர்—வரிப்புறம் வெளிலணி விலுதையு மாகும்.

உ௫உஅ. பச்சோந்தியின்பெயர்—கோம்பி சரடம் சாயானத முசலி - ஓதி தண்டோடோந்தி மயிற் பகை - காம ரூபிபச் சோந்தியு மாகும். (உ௧எ)

உ௫உ௯. ஓந்தியின்பெயர்—ஓமா ளோதி யோந்தியோந்திப்பெயர். (உ௧அ)

உ௫௩௦. மூஞ்சூற்றின்பெயர்—சூரன் சுண்டன் சுந்தரி மூஞ்சூ-றுகுஞ் சுவ வு மப்பெயராமே- (உ௧௯)

உ௲௭. பெண்குரங்கின்பெயர்—மந்தி, யூகம். (உ)

உ௲௮. கருங்குரங்கின்பெயர்—காருகம், யூகம். (உ)

உ௲௯. முசுவின்பெயர்—ஓரி, கலை, கள்வன். (௩)

உ௲௰. மற்றுமுசுவின்பெயர்—கோலாங்கூலம், மைம்முகன். ஆ (௫)

உ௲௧௧. நாயின்பெயர்—ஞமலி, உச்சி, எகினம், குக்கன், கூரன், சூரன் சாரமேயன், சுனகன், புரோகதி, குரைமுகன், ஞாளி, சுணங்கன், முடுவல், பாட்டி, சுவா, பாசி. (௧௬)

உ௲௧௨. பெண்ணாயின்பெயர்—முடுவல். (௧)

உ௲௧௩. செந்நாயின்பெயர்—விருகம், கொக்கு, அண்டிகம், (௩)

உ௲௧௪. முயலின்பெயர்—சசம், வயம். (உ)

உ௲௧௫. நரியின்பெயர்—ஓரி, இகலன், ஊளன், சம்பு, செந்து, குரோட்டம், கோமாயு, சிருகாலன், ஒண்டன், பூரிமாயு. (௧௰)

உ௲௧௬. முதுநரியின்பெயர்—இகலன், கோமாயு, ஓரி. (௩)

உ௲௧௭. கொம்பிலாமிருகத்தின்பெயர்—குமரம். (௧)

உ௲௧௮. பூனையின்பெயர்—வெருகு, மண்டலி, இற்புலி, வனம், ஒதி, மார்ச்சாலம், பாக்கன், பூசை, அலவன், விடருகம். (௧௧)

உ௲௧௯. காட்டுப்பூனையின்பெயர்—கான்புலி, மண்டலி, பாக்கன். (௩)

உ௲௨௰. ஆண்பூனையின்பெயர்—விலாளம், கடுவன், வெருகு. (௩)

உ௲௨௧. அழுங்கின்பெயர்—பனிங்கு, மறி. (உ)

உ௲௨௨. அழுங்கின்குருளையின்பெயர்—மறி. (௧)

உ௲௨௩. நாவியின்பெயர்—மறுவி, மிருகமதம். (உ)

உ௲௨௪. கத்தூரியின்பெயர்—மான்மதம், துருக்கம், நரந்தம், நானம். (௪)

உ௲௨௫. கீரியின்பெயர்—நகுலம், காத்திரி, தீர்வை. (௩)

உ௲௨௬. உடும்பின்பெயர்—முசலிகை, கோதா, தடி. (௩)

உ௲௨௭. அணிலின்பெயர்—வரிப்புறம், வெளில், இலுதை. (௩)

உ௲௨௮. பச்சோந்தியின்பெயர்—கோம்பி, சரடம், சாயானதம், முசலி, ஓதி, தண்டு, ஓத்தி, மயிற்பகை, காமரூபி. (௯)

உ௲௨௯. ஓந்தியின்பெயர்—ஓமான், ஓதி, ஓத்தி, (௩)

உ௲௩௰. மூஞ்சூற்றின்பெயர்—சூரன், சுண்டன், சுந்தரி, சுவவு. (௪)

உ௫௩௧. பெருச்சாளியின்பெயர்—மூடிகங் களதமுந் துருப்பெருச்சாளி.

உ௫௩௨. காரொலியின்பெயர்—கருப்பைகாரொலி. (உ௨௧)

உ௫௩௩. சிறெலியின்பெயர்—சிகிரி சிறெலி. (உ௨௨)

உ௫௩௪. அகழெலியின்பெயர்—இரும்பனகழெலி. (உ௨௩)

உ௫௩௫. இல்லெலியின்பெயர்—ஆகுவில்லெலி. (உ௨௪)

உ௫௩௬. கெவுளியின்பெயர்—புள்ளி கோகிலம் பொந்து மனைக்கோள்-பல்லி கெவுளிப் பெயராகும்மே. (உ௨௫)

உ௫௩௭. எறும்பின்பெயர்—உறவி பிலஞ் சுலோபம் பிபீலிகை யெறும்பே. (உ௨௬)

உ௫௩௮. கறையான்பெயர்—சிதலை யாழல் செல்லே கறையான். (உ௨௭)

உ௫௩௯. தேளின்பெயர்—தெறுக்கால் விருச்சிக நளிவிடந் தேளே. ()

உ௫௪௦. மற்றுந்தேளின்பெயர்—நளியே துட்டன் விடமு மென்பதுமாம். (உ௨௯)

உ௫௪௧. இந்திரகோபத்தின்பெயர்—ஈயன் மூதாதம் பலமிந்திர கோபம்.

உ௫௪௨. விலங்கின்பொதுப்பெயர்—மாவு மிருகமு மானுங்குரங்க மு-மாகும் விலங்கின் பொதுப்பெயராகும். (உ௩௧)

உ௫௪௩. விலங்கின்வாலின்பெயர்—தோகை வாலதி கூலம் வேசகம்-வால தென்ப விலாங் கூலமு மாகும். (உ௩௨)

உ௫௪௪. விலங்கின்வாற்கீழிடத்தின்பெயர்—வாலின் கீழ் வெருகம். ()

உ௫௪௫. விலங்கின்கொம்பின்பெயர்—கோடு மருப்பு முலவையுங் கொம்பே. (உ௩௪)

உ௫௪௬. மற்றும்விலங்கின்கொம்பின்பெயர்—சிருங்கமும் விடாணமுமப் பெயர்தெரிக்கும். (உ௩௫)

உ௫௪௭. புலாலின்பெயர்—புறணி புலாலே புலையு மாகும். (உ௩௬)

உ௫௪௮. மற்றும்புலாலின்பெயர்—ஊழ்த்தசைபூதியென்றுரைக்கப்படுமே.

உ௫௪௯. இறைச்சியின்பெயர்—ஊழ்த்த றசையுந் தடியூன் வள்ளூரம் - பிசிதம் விடக்குத்தூவும் பூழ்தியு மிறைச்சி. (உ௩௮)

உ௫௫௦. ஆவினிறைச்சியின்பெயர்—ஆவினிறைச்சி வள்ளூரமாகும். ()

உ௫௫௧. முடைநாற்றத்தின்பெயர்—பூழ்தி யூழ்த்தல் புலவு முடையே.

உ௫௫௨. தோலின்பெயர்—சருமங் கிருத்திமம் வடகந் துவக்கு-வுரிவை யுரியதள் புறணி பச்சை - துருத்தி பத்துந் தோலென் றாகும். (உ௪௧)

உ௫௫௩. இரத்தத்தின்பெயர்—செந்நீர் குருதி சோரி யெருவை புண்-ணீர் சோணிதங் கறைசுவெனுதிர-மின்னவை யிரத்தமென்னலாகும். (உ௪௨)

உ௫௫௪. சூலின்பெயர்—பீளுஞ் சினையுங் கருவுஞ்சூ லென்ப. (உ௪௩)

௨௫௩௧. பெருச்சாளியின்பெயர்—மூடிகம், களதம், உந்துரு. (௩)

௨௫௩௨. காரெலியின்பெயர்—கருப்பை. (௧)

௨௫௩௩. சிறெலியின்பெயர்—சிகரி. (௧)

௨௫௩௪. அகழெலியின்பெயர்—இரும்பன். (௧)

௨௫௩௫. இல்லெலியின்பெயர்—ஆகு. (௧)

௨௫௩௬. கெவுளியின்பெயர்—புள்ளி, கோகிலம், பொந்து, மனைக்கோள், பல்லி. (௫)

௨௫௩௭. எறும்பின்பெயர்—உறவி, பிலஞ்சுலோபம், பிபீலிகை. (௩)

௨௫௩௮. கறையான்பெயர்—சிதலை, ஆழல், செல். (௩)

௨௫௩௯. தேளின்பெயர்—தெறுக்கால், விருச்சிகம், நளிவிடம். (௪)

௨௫௪௦. மற்றுந்தேளின்பெயர்—நளி, துட்டன், விடமுள். ஆ (௬)

௨௫௪௧. இந்திரகோபத்தின்பெயர்—ஈயல், மூதா, தம்பலம். (௩)

௨௫௪௨. விலங்கின்பொதுப்பெயர்—மா, மிருகம், மான், குரங்கம். (௪)

௨௫௪௩. விலங்கின்வாலின்பெயர்—தோகை, வாலதி, கூலம், வேசகம், இலாங்கூலம். (௫)

௨௫௪௪. விலங்கின்வாற்கீழிடத்தின்பெயர்—வெருகம். (௧)

௨௫௪௫. விலங்கின்கொம்பின்பெயர்—கோடு, மருப்பு, உலவை. (௩)

௨௫௪௬. மற்றும்விலங்கின்கொம்பின்பெயர்—சிருங்கம், விடாணம். (௨)

௨௫௪௭. புலாலின்பெயர்—புறணி, புலை. (௨)

௨௫௪௮. மற்றும்புலாலின்பெயர்—ஊழ்த்தசை, பூதி. ஆ (௪)

௨௫௪௯. இறைச்சியின்பெயர்—ஊழ்த்தல், தசை, தடி, ஊன், வள்ளூரம் பிசிதம், விடக்கு, தூ, பூழ்தி. (௯)

௨௫௫௦. ஆவினிறைச்சியின்பெயர்—வள்ளூரம். (௧)

௨௫௫௧. முடைநாற்றத்தின்பெயர்—பூழ்தி, ஊழ்த்தல், புலவு. (௩)

௨௫௫௨. தோலின்பெயர்—சருமம், கிருத்திமம், வடகம், துவக்கு, உரிவை, உரி, அதள், புறணி, பச்சை, துருத்தி. (௧௦)

௨௫௫௩. இரத்தத்தின்பெயர்—செந்நீர், குருதி, சோரி, எருவை, புண்ணீர், சோணிதம், கறை, சுடுவன், உதிரம். (௯)

௨௫௫௪. சூலின்பெயர்—பீள், சினை, கரு. (௩)

## விலங்கினாண்மரபு.

உருரு. விலங்கினாண்பெயர்—களிறும் போத்துங் கலையுங் கடுவனும் - பகடுஞ் சேவு மொருத்தலுந் தகரு-மேறு மும்பலு மேட்டையு மாவு-மோரியுஞ் சேவலும் விலங்கி னாண்பெயர். (உ௪௪)

உருசு. அவற்றுள்-களிறென்னும்பெயர்—கரியுஞ் சுறவுங் கேழலுங் களிறே. (உ௪ரு)

உருஎ. போத்தென்னும்பெயர்—மரையான் காரான் காட்டாப் புல்வாய் புலி*சல சாதியனைத்தும் போத்தே. (உ௪சு)

உருஅ. மற்றும்போத்தென்னும்பெயர்—யானை வெருகு குதிரை போத்தே. (உ௪எ)

உருகூ. கலையென்னும்பெயர்—மானு முசுவுங் கலையென வருமே. ()

உசுo. கடுவனென்னும்பெயர்—கவியும் பூனையுங் கடுவனென்ப. ()

உசுக. பகடென்னும்பெயர்—யானையு மெருமையும் பெற்றமு மற்றிவை - பான்மையிலுரைக்கிற் பகடென்றுமே. (உருo)

உசுஉ. சேவென்னும்பெயர்—குதிரை யெருது புல்வாய் சேவெனல்.

உசுஙு. ஒருத்தலென்னும்பெயர்—கவரி யானை பன்றி கரடி - யுரியவாகு மொருத்தற் பெயர்க்கொடை. (உருஉ)

உசு௪. தகரென்னும்பெயர்—துருவாடும் வேழமும் யாளியுஞ் சுறவும் - தகரெனு நாமஞ் சாற்றப் பெறுமே. (உருஙு)

உசுரு. ஏறென்னும்பெயர்—புலியுழை மரையாப் புல்வா யெருமை - யரிசு றுச்சங் கேயேறெனலாகும். (உரு௪)

உசுசு. உம்பலென்னும்பெயர்—யானையும் யாடு மும்பலென்ப. (உருரு)

உசுஎ. ஏட்டையென்னும்பெயர்—எருமையும் வெருகு மேட்டை யென்ப. (உருசு)

உசுஅ. மாவென்னும்பெயர்—குதிரை யானை பன்றி மாவே. (உருஎ)

உசுகூ. ஓரியென்னும்பெயர்—முசவு நரியு மோரி யாகும். (உருஅ)

உஎo. சேவலென்னும்பெயர்—கோழியு மன்னமுஞ் சேவலாகும். ()

## விலங்கின்பெண்மரபு. (உசுo)

உஎக. விலங்கின்பெண்பாற்பொதுப்பெயர்—பிணையும் பாட்டியும் பெட்டையும் பிணவு - மாவுமானும் பிடியு நாகும் - மந்தியு மூடுங் கடமையுமென்வை - பிறவும் விலங்கின்பெண்பாலாமே. (உசுக)

*சலசாதியனைத்தும் என்றது-சுறா, முதலை, இடங்கர், கராம், வரால், வாளை இவ்வாறனையும் "நீர்வாழ் சாதியுளறுபிறப்புரிய" என்றதொல்காப்பியம்-பொருள், மரபியல் ௬-ஆல் உணர்க.

## விலங்கினாண்மரபு.

உ௫௫. விலங்கினாண்பெயர்—களிறு, போத்து, கலை, கடுவன், பகடு, சே, ஒருத்தல், தகர், ஏறு, உம்பல், ஏட்டை, மா, ஓரி, சேவல். (கச)

உ௫௬. அவற்றுள்களிறென்னும்பெயர்—கரி, சுறவு, கேழல், ஆகியமூன்றற்குமாம். (௩)

உ௫௭. போத்தென்னும்பெயர்—மரை, ஆன், காரான், காட்டா, புல்வாய், புலி, சலசாதி. (எ-ம்)

உ௫௮. மற்றும்போத்தென்னும்பெயர்—யானை, பூனை, குதிரை. (௩-ம்)

உ௫௯. கலையென்னும்பெயர்—மான், முசு. (உ-ம்)

உ௬௦. கடுவனென்னும்பெயர்—குரங்கு, பூனை. (உ-ம்)

உ௬௧. பகடென்னும்பெயர்—யானை, எருமை, பெற்றம். (௩-ம்)

உ௬௨. சேவென்னும்பெயர்—குதிரை, எருது, புல்வாய். (௩-ம்)

உ௬௩. ஒருத்தலென்னும்பெயர்—கவரி, யானை, பன்றி, கரடி. (௪-ம்)

உ௬௪. தகரென்னும்பெயர்—துருவாடு, வேழம், யாளி, சுறா. (௪-ம்)

உ௬௫. ஏறென்னும்பெயர்—புலி, உழை, மரை, ஆ, புல்வாய், எருமை, பன்றி, சுறா, சங்கு. (௯-ம்)

உ௬௬. உம்பலென்னும்பெயர்—யானை, யாடு. (உ-ம்)

உ௬௭. ஏட்டையென்னும்பெயர்—எருமை, வெருகு. (உ-ம்)

உ௬௮. மாவென்னும்பெயர்—குதிரை, யானை, பன்றி. (௩-ம்)

உ௬௯. ஓரியென்னும்பெயர்—முசு, நரி. (உ-ம்)

உ௭௦. சேவலென்னும்பெயர்—கோழி, அன்னம். (உ-ம்)

## விலங்கின்பெண்மரபு.

உ௭௧. விலங்கின்பெண்பாற்பொதுப்பெயர்—பிணை, பாட்டி, பெட்டை, பிணா, ஆ, ஆன், பிடி, நாகு, மந்தி, மூடு, கடமை. (௧௧-ம்)

உருஎஉ. பிணையென்னும்பெயர்—அவற்றுள்-உழையு நாயும் பன்றியும் புல்வாயும்-பிணையெனும் பெயர்க்கொடை பேசப்படுமே. (உசுஉ)

உருஎங. பாட்டியென்னும்பெயர்—பன்றியு நாயும் பாட்டியென்றாகும்.()

உருஎச. மற்றும்பாட்டியென்னும்பெயர்—நரியிற் பாட்டி நடை பெற்றியலும் - ஒரு சார்விலங்கின் பெண்பெயர்க்குரைப்பர். (உசுச)

உருஎரு. பெட்டையென்னும்பெயர்—ஒட்டகங் குதிரை கழுதை மரைசிங்கம்—பெட்டை யென்னும் பெயர்க் கொடை பெறுமே. (உசுரு)

உருஎசு. பிணாவென்னும்பெயர்—பன்றி புல்வாய் நாயென மூன்றும் - பின்றாக் காட்சிப் பிணாவொடு வருமே. (உசுசு)

உருஎஎ. ஆவென்னும்பெயர்—எருமையும் பசுவும் மரையுமா வென்ப. ()

உருஎஅ- ஆனென்னும்பெயர்—ஆவு மெருமைம மரையு மானே.(உசுஅ)

உருஎகூ. பிடியென்னும்பெயர்—கரியும் யூகமுங் கவரியும் பிடியே. ()

உருஅ0. நாகென்னும்பெயர்—மரையும் பெற்றமு மெருமையு நாகே. ()

உருஅக. மற்றும்நாகென்னும்பெயர்—நந்து நீர்வாழ் சாதியு நாகே. ()

உருஅஉ. மந்தியென்னும்பெயர்—குரங்கும் யூகமு முசுவு மென்றிவை - வருங்காற் பெண்பெயர் மந்தியென்றாகும்- (உஎஉ)

உருஅங. மூடுகடமையென்னும்பெயர்—மூடுங் கடமையு மாடல பெறாவே. (உஎங)

உருஅச. பெண்பிணாவென்னும்பெயர்கள்—பெண்பா லெவையும் பெண்ணும் பிணாவுமாம். (உஎச)

உருஅரு. ஆணென்னும்பெயர்—ஆண்பா லெவையு மாணெனப் படுமே.

விலங்கின்பிள்ளைமரபு.

உருஅசு. விலங்கின்பிள்ளைப்பெயர்—குருளையுங் குட்டியும் பறழும் பிள்ளையு - மறியுங் கன்றுங் குழவியும் பார்ப்பும் - மகவும் விலங்கின் பிள்ளைப் பெயரே. (உஎசு)

.உசஅஎ. குருளை, பறழ், குட்டியென்னும்பெயர்கள்—அவற்றுள் - புலி முயல் பன்றி நரிநா யென்றிவை - குருளையும் பறழுங் குட்டியு மாகும். ()

உருஅஅ. பிள்ளையென்னும்பெயர்—பிள்ளைப் பெயர்நா யொழியப் பெறுமே. (உஎஅ)

உருஅகூ. மறியென்னும்பெயர்—ஆடுங்குதிரையுமா னழுங்குமறியெனல்.

உருகூ0. கன்றென்னும்பெயர்—கலையு மானுங் கழுதையு மரையும்-பசுவு மெருமையுங் கடமையும் யானையு - மொட்டகமுங் கவரியுங் கராமுங் கன்றென்ப. (உஅ0)

உ௫எஉ. பிணையென்னும்பெயர்—உழை, நாய், பன்றி, புல்வாய். (ச-ம்)

உ௫எ௩. பாட்டியென்னும்பெயர்—பன்றி, நாய். (உ-ம்)

உ௫எச. மற்றும் பாட்டியென்னும்பெயர்—நரி, ஒருசார் விலங்கின் பெண்பாற்கும் பொது. (௩-ம்)

உ௫எ௫. பெட்டையென்னும்பெயர்—ஒட்டகம், குதிரை, கழுதை, மரை, சிங்கம். (௫-ம்)

உ௫எ௬. பிணாவென்னும்பெயர்—பன்றி, புல்வாய், நாய். (௩-ம்)

உ௫எஎ. ஆவென்னும்பெயர்—எருமை, பசு, மரை. (௩-ம்)

உ௫எஅ. ஆனென்னும்பெயர்—ஆ, எருமை, மரை. (௩-ம்)

உ௫எகூ. பிடியென்னும்பெயர்—கரி, யூகம், கவரி. (௩-ம்)

உ௫அ0. நாகென்னும்பெயர்—மரை, பெற்றம், எருமை. (௩-ம்)

உ௫அக. மற்றும் நாகென்னும்பெயர்—நந்து, நீர்வாழ்சாதி. (உ-ம்)

உ௫அஉ. மந்தியென்னும்பெயர்—குரங்கு, யூகம், முசு. (௩-ம்)

உ௫அ௩. மூடுகடமையென்னும்பெயர்—ஆடு. (க-ம்)

உ௫அச. பெண்பிணாவென்னும்பெயர்—அஃறிணையில்வரும் பெண்பாலெவற்றிற்குமாம். ()

உ௫அ௫. ஆணென்னும்பெயர்—அஃறிணையில்வரும் ஆண்பாலெவற்றிற்குமாம். ()

## விலங்கின்பிள்ளைமரபு.

உ௫அ௬. விலங்கின்பிள்ளைப்பெயர்—குருளை, குட்டி, பறழ், பிள்ளை, மறி, கன்று, குழவி, பார்ப்பு, மகவு. (௯)

உ௫அஎ. குருளை, பறழ், குட்டியென்னும்பெயர்கள்—புலி, முயல், பன்றி, நரி, நாய். (௫ம்)

உ௫அஅ. பிள்ளையென்னும்பெயர்—நாயொழிந்தவற்றிற்காம். (க)

உ௫அகூ. மறியென்னும்பெயர்—ஆடு, குதிரை, மான், அழுங்கு. (ச-ம்)

உ௫கூ0. கன்றென்னும்பெயர்—கலை, மான், கழுதை, மரை, பசு, எருமை, கடமை, யானை, ஒட்டகம், கவரி, கராம். (கக-ம்)

உ௬கக. குழவி, மகவு, குட்டி, பிள்ளை, பறழ், பார்ப்பென்னும்பெயர்கள்—குரங்கு முதலாய்க் கோட்டில் வாழும் - விலங்கின் பிள்ளைப் பெயரினை விளம் பிற் - குழவியு மகவுங் குட்டியும் பிள்ளையும் - பறழும் பார்ப்புமப் பண்பா கும் மே. (உஅக)

உ௬கஉ. பறழ், குட்டியென்னும்பெயர்கள்—வெருகு நரியு முயலு மென் றிவை - பறழுங் குட்டியு மாகும் பண்பே. (உஅஉ)

உ௬கரு. பிள்ளை. பார்ப்பு, பறழென்னும்பெயர்கள்—பிள்ளையும் பார்ப்பும் பறழுமென் பெயர்க - டள்ளருஞ் சிறப்பிற் றவழ்வன பெறுமே. (உஅரு)

உ௬கச. குழவியென்னும்பெயர்—யானையுங் கடமையு மரையு மெரு மையு - மானுங் குழவிப் பெயரோடடையும். (உஅச)

உ௬கரு. குருளை, கன்றென்னும்பெயர்கள்—குருளையுங் கன்று மானிற் கொளலே. (உஅ௫)

உ௬க௬. குழவியென்னும்பெயர்—குழவி முசுவின் குணநடை பெறு மே. (உஅ௬)

உ௬கஎ. பிள்ளையென்னும்பெயர்—நந்தி னேற்றையும் மானின் குருளை யும் - வந்துழியொருசார் வழங்கும் பிள்ளைப்பெயர். (உஅஎ)

உ௬கஅ. பறழ்குட்டியென்னும்பெயர்கள்—*பாக்கனுமணிலும்பறழொடு குட்டி. (உஅஅ)

உ௬கக. பார்ப்பு, பிள்ளையென்னும்பெயர்கள்—பார்ப்பும்பிள்ளையுந் தவழ் சாதிக்குரிய. (உஅக)

உகூ00. விலங்கின்கூட்டத்தின்பெயர்—சாலம் வியூகம் யூதம் விருந்தங்- குலமார்கணமும் விலங்கின் கூட்டம். (உகூ0)

ரு - வது பாம்பின்வகை.

உகூ0க. பாம்பின்பெயர்—அரவு கட்செவி யங்கதம் வியாளம்-உரகம் பன் னக நாகஞ் சர்ப்ப - மரியே மாசுணம் புயங்கம் பாந்தள் - பணியகிதந்த ருகம் போகி - விடதரங் கும்பி நசங்கா கோதர-மராளஞ்சக்கிரி யனைத்தும் பாம்பே. (உகூக)

உகூ0உ. மற்றும்பாம்பின்பெயர்—வாகுவவகதங் கூடபதமும் பாம்பே.()

உகூ0ரு. சாரைப்பாம்பின்பெயர்—துண்ட மிலஞ்சி சாரைப் பாம்பே. ()

உகூ0ச. மண்டலிப்பாம்பின்பெயர்—மண்டலியாவுங் கோளகமாகும். ()

உகூ0௫. கண்குத்திப்பாம்பின்பெயர்—மாலுதாசனன் மற்றது கண்குத்தி.

---

*பாக்கன்-பூனை.

உ௫கூக. குழவு, மகவு, குட்டி, பிள்ளை, பறழ், பார்ப்பென்னும்பெயர்கள்—குரங்கு முதன்மரக்கோட்டில் வாழ்விலங்கின் பிள்ளைகட்காம். ()

உ௫கூஉ. பறழ், குட்டியென்னும்பெயர்கள்—வெருகு, நரி, முயல். (௩-ம்)

உ௫கூ௩. பிள்ளை, பார்ப்பு, பறழென்னும்பெயர்கள்—தவழ்சாதிகள். (க-ம்)

உ௫கூ௪. குழவியென்னும்பெயர்—யானை, கடமை, மரை, எருமை, மான். (௫)

உ௫கூ௫. குருளை, கன்றென்னும்பெயர்கள்—மான். (க-ம்)

உ௫கூ௬. குழவியென்னும்பெயர்—முசு. (க-ம்)

உ௫கூ௭. பிள்ளையென்னும்பெயர்—சங்கேறு, மான்குருளை. (உ-ம்)

உ௫கூ௮. பறழ், குட்டியென்னும்பெயர்கள்—பாக்கன், அணில். (உ-ம்)

உ௫கூகூ. பார்ப்பு, பிள்ளையென்னும்பெயர்கள்—தவழ்சாதிக்குரியன. (க-ம்)

உ௬00. விலங்கின்கூட்டத்தின்பெயர்—சாலம், வியூகம், யூதம், விருந்தம், குலம், கணம். (௬-ம்)

## பாம்பின்வகை.

உ௬0க. பாம்பின்பெயர்—அரவு, கட்செவி, அங்கதம், வியாளம், உரகம், பன்னகம், நாகம், சர்ப்பம், அரி, மாசுணம், புயங்கம், பாந்தள், பணி, அகி, தந்தசூகம், போகி, விடதரம், கும்பிநசம், காகோதரம், மராளம், சக்கிரி. (உக)

உ௬0உ. மற்றும்பாம்பின்பெயர்—வாகுவவகதம், கூடபதம். ஆ (உ௩)

உ௬0௩. சாரைப்பாம்பின்பெயர்—துண்டம், இலஞ்சி. (உ)

உ௬0௪. மண்டலிப்பாம்பின்பெயர்—கோளகம். (க)

உ௬0௫. கண்குத்திப்பாம்பின்பெயர்—உதாசனன். (க)

உகூ௦ஆ. பாம்பின்படத்தின்பெயர்—பையும் பணமும் பாம்பின் படமே.

உகூ௦எ. பாம்பின்படப்பொறியின்பெயர்—உத்தியுந் துத்தியு முரகபடப் பொறி. (உகூஎ)

உகூ௦அ. நஞ்சின்பெயர்—காளங் காரி கரள நீலங்கர - மாலால மாலங் கடுவிட நஞ்சே. (உகூஅ)

உகூ௦கூ. பாம்பினச்சுப்பல்லின்பெயர்—கட்செவி நஞ்சு காலும்பல் தட்டம். (உகூகூ)

உகூக௦. நாகரவண்டின்பெயர்—நாகர வண்டி ஞம ரொள்ளே. (ங௦௦)

உகூகக. சிலந்தியின்பெயர்—சிலம்பி யுலூதை காவன் சிலந்தி. (ங௦க)

உகூகஉ. உளுவின்பெயர்—உளுவென் கிளவி யுசுவாகு மென்ப. (ங௦உ)

உகூகங. நாங்கூழின்பெயர்—நாங்கூழக் கிளவி பூநாகமு மாகும். (ங௦ங)

உகூகச. உலண்டின்பெயர்—கோற்புழு வுலண்டு கீட மாகும். (ங௦ச)

உகூகரு. புழுவின்பெயர்—கீடமும் பொட்டுங் கிருமியும் புழுவே. (ங௦ரு)

## ச - வது சலசரவகை.

உகூகசு. மகரமீனின்பெயர்—மானே சுறுக்கலை மகரமீனின் பெயர். ()

உகூகஎ. மற்றுமகரமீனின்பெயர்—மீனே றென்பதும் விளம்பப் பெறுமே. (ங௦எ)

உகூகஅ. இறுன்மீனின்பெயர்—இறவே யிறுன்மீன். (ங௦அ)

உகூககூ. கெளிற்றுமீனின்பெயர்—கெளிறு கெளிற்றுமீன். (ங௦கூ)

உகூஉ௦. பெருமீனின்பெயர்—யானைமீன் பனைமீன் றிமிலம் பெருமீன்.

உகூஉக. யானைமீனைவிழுங்குமீனின்பெயர்—யானையை விழுங்குமீன்றிமிங்கில மாகும். (ஙகக)

உகூஉஉ. அம்மீனைவிழுங்குமீனின்பெயர்—அம்மீனை விழுங்குமீன் றிமிங்கில கிலமே. (ஙகஉ)

உகூஉங. ஆரான்மீனின்பெயர்—ஆரலாரான்மீன். (ஙகங)

உஅஉச. கெண்டைமீனின்பெயர்—சபரங் கெண்டைமீன். (ஙகச)

உகூஉரு. மலங்குமீனின்பெயர்—வனையு நுளையு மலங்கென் றாகும். ()

உகூஉசு. அயிரையின்பெயர்—அயிரை நொய்ம்மீன் சிறுமீ னாகும். (ஙகசு)

உகூஉஎ. மீன்பொதுப்பெயர்—மயிலையு மானு மச்சமு மீனமும் - புழலு மீனின் பொதுப்பெய ராகும். (ஙகஎ)

உகூஉஅ. முதலையின்பெயர்—சிஞ்சு மார மிடங்கர் வன்மீ - னிங்கிவை கராவே காரமுதலை யென்ப. (ஙகஅ)

உகூஉகூ. ஆண்முதலையின்பெயர்—கராவதனாணெனக்கருதல் வேண்டும். (ஙககூ)

உகூ0சு. பாம்பின்படத்தின்பெயர்—பை, பணம். (உ)

உகூ0எ. பாம்பின்படப்பொறியின்பெயர்—உத்தி, துத்தி. (உ)

உகூ0அ. நஞ்சின்பெயர்—காளம், காரி, கரளம், நீலம், கரம், ஆலாலம், ஆலம், கடு, விடம். (கூ)

உகூ0கூ. பாம்பினச்சுப்பல்லின்பெயர்—தட்டம். (க)

உகூக0. நாகரவண்டின்பெயர்—நொள்ளை. (க)

உகூகக. சிலந்தியின்பெயர்—சிலம்பி, உலூதை, காவன். (ஙா)

உகூகஉ. உளுவின்பெயர்—உசு. (க)

உகூகங. நாங்கூழின்பெயர்—பூநாகம். (க)

உகூகச. உலண்டின்பெயர்—கோற்புழு, கீடம். (உ)

உகூகரு. புழுவின்பெயர்—கீடம், பொட்டு, கிருமி. (ஙா)

சலசரவகை.

உகூகசு. மகரமீனின்பெயர்—மான், சுறு, கலை. (ஙா)

உகூகஎ. மற்றுமகரமீனின்பெயர்—மீனேறு. ஆடு(ச)

உகூகஅ. இறுன்மீனின்பெயர்—இறவு. (க)

உகூககூ. கெளிற்றுமீனின்பெயர்—கெளிறு. (க)

உகூஉ0. பெருமீனின்பெயர்—யானைமீன், பனைமீன், திமிலம். (ஙா)

உகூஉக. யானைமீனைவிழுங்குமீனின்பெயர்—திமிங்கிலம். (க)

உகூஉஉ. அம்மீனைவிழுங்குமீனின்பெயர்—திமிங்கிலகிலம். (க)

உகூஉங. ஆரான்மீனின்பெயர்—ஆரல் (க)

உகூஉச. கெண்டைமீனின்பெயர்—சபரம். (க)

உகூஉரு. மலங்குமீனின்பெயர்—ஏனை, நூழை. (உ)

உகூஉசு. அயிரையின்பெயர்—நொய்ம்மீன், சிறுமீன். (உ)

உகூஉஎ. மீன்பொதுப்பெயர்—மயிலை, மான், மச்சம், மீனம், புழல், (ரு)

உகூஉஅ. முதலையின்பெயர்—சிஞ்சுமாரம், இடங்கர், வன்மீன், கரா, கராம், (ரு)

உகூஉகூ. ஆண்முதலையின்பெயர்—கரா. (க)

உகூ௦. சிப்பியின்பெயர்—இப்பி சுத்தி சிப்பி யாகும். (கூஉ௦)

உகூக. பறவையென்னும்பெயர்—தோற்சிற கெல்லாம் பறவை யெனப்படும். (கூஉக)

உகூஉ. ஆமையின்பெயர்—கமடங் கூர்மங் கச்சப முறுப்படக்கி-கடிப்புமாமைப் பெயராகும்மே. (கூஉஉ)

உகூக. பெண்ணாமையின்பெயர்—துளி பெண்ணாமை யாமெனச் சொல்லுப. (கூஉக)

உகூச. சங்கின்பெயர்—நந்து சுத்தி நாகு பணிலம் - வண்டு கோடு வளையே சுரிமுகங் - கம்பு வெள்ளை யிடம்புரி சங்கே. (கூஉச)

உகூரு. மற்றுஞ்சங்கின்பெயர்—தராவுமதன்பெயர்சாற்றப் பெறுமே. ()

உகூகூ. வலம்புரிச்சங்கின்பெயர்—வலம்புரி கொக்கனை. (கூஉகூ)

உகூஎ. சலஞ்சலத்தின்பெயர்—சலஞ்சலம் பணிலம். (கூஉஎ)

உகூஅ. இடம்புரிச்சங்கென்னும்பெயர்—இப்பி யாயிரஞ் சூழ்ந்த திடம்புரி. (கூஉஅ)

உகூகூ. வலம்புரிச்சங்கென்னும்பெயர்—இடம்புரி யாயிரஞ் சூழ்ந்தது வலம்புரி. (கூஉகூ)

உகூச௦. சலஞ்சலமென்னும்பெயர்—வலம்புரி யாயிரஞ் சூழ்ந்தது சலஞ்சலம். (கூக௦)

உகூசக. பாஞ்சசன்னியமென்னும்பெயர்—சலஞ்சலமா யிரஞ்சூழ்ந்தது பாஞ்ச சன்னியம். (கூகக)

உகூசஉ. நத்தையின்பெயர்—கருநந்து நாகு சுரிமுக நத்தை. (கூகஉ)

உகூசக. கிளிஞ்சிலின்பெயர்—ஏரலு மெருந்து மூரலுங் கிளிஞ்சில். ()

உகூசச. தவளையின்பெயர்—அரிமண் டேகந் தேரை தவளை. (கூகச)

உகூசரு. மற்றுந்தவளையின்பெயர்—நுணலையும் பேகமு நுவல்பெயர் பெறுமே. (கூகரு)

உகூசகூ. ஞெண்டின்பெயர்—கள்வ னலவ னள்ளி கர்க்கடகங் - குளிரே கவைத்தாண் ஞெண்டின் கூற்றே. (கூககூ)

உகூசஎ. ஆண்ஞெண்டின்பெயர்—அலவ னாண்ஞெண்டாகு மென்ப. ()

உகூசஅ. பலகறையின்பெயர்—பட்டி கவடி யலகு பலகறை. (கூகஅ)

உகூசகூ. அட்டையின்பெயர்—உருவே சளுக மட்டையென மொழிப. ()

எட்டாவது

மாப்பெயர்வகைமுற்றிற்று.

ஆ சூத்திரம் - உகூசகூ.

உ௩௩0. சிப்பியின்பெயர்—இப்பி, சுத்தி. (உ)

உ௩௩௧. பறவையென்னும் பெயர்—தோற்சிறகுள்ளனவற்றிற்கெல்லாம். (௩)

உ௩௩உ. ஆமையின்பெயர்—கமடம், கூர்மம், கச்சபம், உறுப்படக்கி, கடிப்பு. (௫)

உ௩௩௩. பெண்ணாமையின்பெயர்—துளி. (௧)

உ௩௩௪. சங்கின்பெயர்—நந்து, சுத்தி, நாகு, பணிலம், வண்டு, கோடு, வளை, சுரிமுகம், கம்பு, வெள்ளை, இடம்புரி. (௧௧)

உ௩௩௫. மற்றுஞ்சங்கின்பெயர்—தரா. (௧)

உ௩௩௬. வலம்புரிச்சங்கின்பெயர்—கொக்கரை. (௧)

உ௩௩௭. சலஞ்சலத்தின்பெயர்—பணிலம். (௧)

உ௩௩௮. இடம்புரிச்சங்கின்பெயர்—இப்பியாயிரஞ் சூழ்ந்தது.

உ௩௩௯. வலம்புரிச்சங்கென்னும்பெயர்—இடம்புரிச்சங்காயிரஞ், சூழ்ந்தது.

உ௩௪0. சலஞ்சலமென்னும்பெயர்—வலம்புரிச்சங்காயிரஞ்சூழ்ந்தது.

உ௩௪௧. பாஞ்சசன்னியமென்னும்பெயர்—சலஞ்சலச்சங்காயிரஞ்சூழ்ந்தது.

உ௩௪உ. நத்தையின்பெயர்—கருநந்து, நாகு, சுரிமுகம். (௩)

உ௩௪௩. இளிஞ்சிலின்பெயர்—ஏரல், எருந்து, ஊரல். (௩)

உ௩௪௪. தவளையின்பெயர்—அரி, மண்டூகம், தேரை. (௩)

உ௩௪௫. மற்றுந்தவளையின்பெயர்—நுணலை, பேகம். ஆ (உ)

உ௩௪௬. ஞெண்டின்பெயர்—கள்வன், அலவன், நள்ளி, கர்க்கடகம், குளிர், கவைத்தாள். (௬)

உ௩௪௭. ஆண்ஞெண்டின்பெயர்—அலவன். (௧)

உ௩௪௮. பலகறையின்பெயர்—பட்டி, கவடி, அலகு. (௩)

உ௩௪௯. அட்டையின்பெயர்—உரு, சளுகம். (உ)

எட்டாவது

மாப்பெயர்வகைமுற்றிற்று

ஒன்பதாவது.

# மரப்பெயர்வகை.

உசுரு0. ஐந்தருவருக்கமாவன—சந்தானந் தேவதாரங் கற்பகம்—மந்தாரம் பாரிசாதமைந்தருவருக்கம். (க)

உசுருக. இவ்வைவகைமரத்தின்பெயர்—இம்மர மைந்துந் தெய்வமரமென்ப. (உ)

உசுருஉ. கற்பகஞ்சேர்கொடியின்பெயர்—கற்பகஞ் சேர்கொடிகாமவல்லி (ங)

உசுருங. சந்தனமரத்தின்பெயர்—சாந்த மலயசஞ்சந்திர திலகமேய்ந்தவாரஞ் சந்திவை சந்தனம். (ச)

உசுருச. செஞ்சந்தனத்தின்பெயர்—பிசனஞ் செஞ்சந்தனத்தின் பெயரே. (ரு)

உசுருரு. அகிலின்பெயர்—அகருவும் பூழிலுங் காழ்வையுமகிலே. (சு)

உசுருசு. மற்றும்அகிலின்பெயர்—பகிரிற் காக துண்டமுமாகும். (எ)

உசுருஎ. குங்குமமரத்தின்பெயர்—மரவமுந் துருக்கமுங் குங்குமமரமே. (அ)

உசுருஅ. சண்பகத்தின்பெயர்—சம்பகஞ்செண்பகஞ் சண்பகமரமே. (கூ)

உசுருகூ. சிறுசண்பகத்தின்பெயர்—சாதி மாலதி சிறுசண்பகமே. (க0)

உசுசு0. செவ்வந்தியின்பெயர்—பட்டிகை செவ்வந்தி. (கக)

உசுசுக. புரசைமரத்தினபெயர்—பிரமதருப் பலாசம் புரசைமரப் பெயர் (கஉ)

உசுசுஉ. மற்றும்புரசைமரத்தின்பெயர்—புனமுருக் கென்றும் புகலப்பெறுமே. (கங)

உசுசுங. ஆலமரத்தின்பெயர்—வடமரந் தொன்மரம் பூதவங் கான்மரம் பழுமர நியக்குரோதங் கோளியா லென்ப. (கச)

உசுசுச. தேக்கின்பெயர்—சாதி சாகந் தேக்கந் தருவே. (கரு)

உசுசுரு. வேங்கைமரத்தின்பெயர்—பீதசாலங்கணி திமிசுதிமில் வேங்கை (கசு)

உசுசுசு. கொன்றைமரத்தின்பெயர்—இதழிசடேக்கைசாமங்கொன்றை. ()

# பெயர்ப்பிரிவு.

உசுடுoo. ஐந்தருவருக்கமாவன—சந்தானம், தேவதாரம், கற்பகம், மந்தாரம், பாரிசாதம். (டு)

உசுடுக. இவ்வைவகைமரத்தின்பெயர்—தெய்வமரமென்றுகூறுவர்.

உசுடுஉ. கற்பகஞ்சேர்கொடியின்பெயர்—காமவல்லி. (க)

உசுடுரு. சந்தனமரத்தின்பெயர்—சாந்தம், மலயசம், சந்திரதிலகம், ஆரம், சந்து. (டு)

உசுடுச. செஞ்சந்தனத்தின்பெயர்—பிசனம். (க)

உசுடுடு. அகிலின்பெயர்—அகரு, பூழில், காழ்வை. (ரு)

உசுடுசு. மற்றும்அகிலின்பெயர்—காகதுண்டம். ஆகூ(ச)

உசுடுஎ. குங்குமமரத்தின்பெயர்—மரவம், துருக்கம். (உ)

உசுடுஅ. சண்பகத்தின்பெயர்—சம்பகம், செண்பகம். (உ)

உசுடுகூ. சிறுசண்பகத்தின்பெயர்—சாதி, மாலதி. (உ)

உசுசுo. செவ்வந்தியின்பெயர்—பட்டிகை. (க)

உசுசுக. புரசைமரத்தின்பெயர்—பிரமதரு, பலாசம். (உ)

உசுசுஉ. மற்றும்புரசைமரத்தின்பெயர்—புனமுருக்கு. ஆகூ(ரு)

உசுசுரு. ஆலமரத்தின்பெயர்—வடமரம், தொன்மரம், பூதவம், கான்மரம், பழுமரம், நியக்குரோதம், கோளி. (எ)

உசுசுச. தேக்கின்பெயர்—சாதி, சாகம். (உ)

உசுசுடு. வேங்கைமரத்தின்பெயர்—பீதசாலம், கணி, திமிசு, திமில். (ச)

உசுசுசு. கொன்றைமரத்தின்பெயர்—இதழி, கடுக்கை, தாமம். (ரு)

உ௬௬எ. மற்றுங்கொன்றைமரத்தின்பெயர்—மதலை யார்க்கு வதமென்றாகும். (௪அ)

உ௬௬அ. அரசின்பெயர்—சுவலையச் சுவத்தம் பிப்பலம் போதி திருமரங்-குஞ்சராசனம் பணை கணவமரசு. (௪௯)

உ௬௬௯. ஆச்சாமரத்தின்பெயர்—சாலமராமர மாவுமாச்சா (௫௦)

உ௬எ௦. மகிழமரத்தின்பெயர்—வகுள மிலஞ்சி கேசர மகிழே. (௫௧)

உ௬எ௧. அசோகின்பெயர்—பிண்டி செயலைகா கோளி யசோகு. (௫௨)

உ௬எஉ. மருதின்பெயர்—அருச்சுனம் பூதவ மருதமாகும். (௫௩)

உ௬எ௩. இறலியின்பெயர்—இரத்தியிறலி. (௫௪)

உ௬எ௪. தான்றியின்பெயர்—கலித்துருமந்தான்றி. (௫௫)

உ௬எ௫. குராவின்பெயர்—கோட்டங்குடிலங்குராவாகும்மே. (௫௬)

உ௬எ௬. மற்றுங்குராவின்பெயர்—கோபி தாரமுங் குராமரமாகும். (௫எ)

உ௬எஎ. நாவலின்பெயர்—நாவலா ருகதம் சம்பு நேரேடம் (௫அ)

உ௬எஅ. குழிநாவலின்பெயர்—சாதே வங்குழி நாவலாகும். (௫௯)

உ௬எ௯. வேம்பின்பெயர்—நிம்பம் வேம்பு பிசிதமு மாகும். (௬௦)

உ௬அ௦. அனிச்சமரத்தின்பெயர்—நறவஞ் சுள்ளி யருப்பலமனிச்சம். ()

உ௬அ௧. பாதிரியின்பெயர்—பாடலம் புன்காலி பாதிரி யாகும். (௬உ)

உ௬அஉ. ஞாழலின்பெயர்—நாகம் பலினி ஞாழலாகும். (௬௩)

உ௬அ௩. கோங்கின்பெயர்—கன்னி காரந் துருமோற் பலமே - குயாகுன்பிணரோ கோங்கா கும்மே. (௬௪)

உ௬அ௪. நாரத்தையின்பெயர்—நார நரந்த நாரங்க நாரத்தை. (௬௫)

உ௬அ௫. குமிழின்பெயர்—கூம்பல் கடம்பல் குமிழெனக் கூறுப. (௬௬)

உ௬அ௬. அதிமதுரத்தின்பெயர்—யட்டி மதுரமதுக மதிங்கம்—தட்டின்றுணைப்பிற் சல்லியு மதுவே. (௬எ)

உ௬அஎ. மஞ்சாடிமரத்தின்பெயர்—திலகமஞ்சாடி. (௬அ)

உ௬அஅ. குடைவேலின்பெயர்—உடைகுடைவேலே. (௬௯)

உ௬அ௯. புன்னையின்பெயர்—புன்னைபுன்னாகம். (எ௦)

உ௬௯௦. சுரபுன்னையின்பெயர்—வழைசுரபுன்னை. (எ௧)

உ௬௯௧. வெட்சியின்பெயர்—சிந்தூரமுங் குல்லையுஞ் செச்சையும் வெட்சி. (எஉ)

உ௬௯உ. செருந்தியின்பெயர்—பஞ்சரஞ் செருந்தி செங்கோடு மாகும் )

உ௬௯௩. அலரியின்பெயர்—கவீரங் கணவீரங் கரவீர மலரி. (எ௪)

உ௬௯௪. மற்றுமலரியின்பெயர்—அயமர மடுக்கு மென்ப தாகும். (எ௫)

உ௬௯௫. முண்முருக்கின்பெயர்—கவிரோ கிஞ்சுக முண்முருக் காகும் ()

உசுகூஎ. மற்றுங்கொன்றைமரத்தின்பெயர்—மதலை, ஆர்க்குவதம். ஆ (ரு)

உசுசுஅ. அரசின்பெயர்—சுவலை, அச்சுவத்தம், பிப்பலம், போதி, திருமரம், குஞ்சராசனம், பணை, கணவம், (அ)

உசுசுகூ. ஆச்சாமரத்தின்பெயர்—சாலம், மராமரம், ஆ. (ங)

உசுஎ0. மகிழமரத்தின்பெயர்—வகுளம், இலஞ்சி, கேசரம். (ஙு)

உசுஎக. அசோகின்பெயர்—பிண்டி, செயலை, காகோளி. (ங)

உசுஎஉ. மருதின்பெயர்—அருச்சுனம், பூதவம். (உ)

உசுஎங. இறலியின்பெயர்—இரத்தி- (க)

உசுஎச. தான்றியின்பெயர்—கலித்துருமம். (க)

உசுஎரு. குராவின்பெயர்—கோட்டம், குடிலம். (உ)

உசுஎசு. மற்றுங்குராவின்பெயர்—கோபிதாரம். ஆ (ங)

உசுஎஎ. நாவலின்பெயர்—ஆருகதம், சம்பு, நேரேடம். (ங)

உசுஎஅ, குழிநாவலின்பெயர்—சாதேவம். (க)

உசுஎகூ. வேம்பின்பெயர்—நிம்பம், பிசிதம். (உ)

உசுஅ0. அனிச்சமரத்தின்பெயர்—நறவம், சுள்ளி, அருப்பலம். (ஙு)

உசுஅக. பாதிரியின்பெயர்—பாடலம், புன்காலி. (உ)

உசுஅஉ. ஞாழலின்பெயர்—நாகம், பலினி. (உ)

உசுஅங. கோங்கின்பெயர்—கன்னிகாரம், துருமோற்பலம், குயா, பிணர். (ச)

உசுஅச. நாரத்தையின்பெயர்—நாரம், நரந்தம், நாரங்கம். (ங)

உசுஅரு. குமிழின்பெயர்—கூம்பல், கடம்பல். (உ)

உசுஅசு. அதிமதுரத்தின்பெயர்—யட்டி, மதுகம், அதிங்கம், சல்லி. (ச)

உசுஅஎ, மஞ்சாடிமரத்தின்பெயர்—திலகம். (க)

உசுஅஅ. குடைவேலின்பெயர்—உடை. (க)

உசுஅகூ. புன்னையின்பெயர்—புன்னாகம். (க)

உசுகூ0. சுரபுன்னையின்பெயர்—வழை. (க)

உசுகூக. வெட்சியின்பெயர்—சிந்தூரம், குல்லை, செச்சை. (ங)

உசுகூஉ. செருந்தியின்பெயர்—பஞ்சரம், செங்கோடு. (உ)

உசுகூங. அலரியின்பெயர்—கவீரம், கணவீரம், கரவீரம். (ங)

உசுகூச. மற்றுமலரியின்பெயர்—அயமரம், அடுக்கு. ஆ (ரு)

உசுகூரு. முண்முருக்கின்பெயர்—கவிர், கிஞ்சுகம். (உ)

உ௬௬௬. பெருங்குறிஞ்சியின்பெயர்—கோரண்டம் குரண்டகம் *பெருங் குறிஞ்சி யாகும். (௪எ)

உ௬௬எ. பொன்வண்ணக்குறிஞ்சியின்பெயர்—பீதை பொன்வண்ணக் குறிஞ்சி யாகும். (௪அ)

உ௬௬அ. வாடாக்குறிஞ்சியின்பெயர்—குரவகம்வாடாக் குறிஞ்சி யாகும்.()

உ௬௬௯. மழைவண்ணக் குறிஞ்சியின் பெயர்—பாணநீலி மழைவண்ணக் குறிஞ்சி. (௫0)

உஎ0. பவளக்குறிஞ்சியின்பெயர்—நீடு தீண்டியம் பவளக் குறிஞ்சி.()

உஎ0க. மகரவாழையின்பெயர்—மருகுந்தானமு மகரவாழை. (௫உ)

உஎ0உ. இருவேலியின்பெயர்—வேரிபீ தகமூல கந்தமிருவேலி. (௫௩)

உஎ0௩. குருக்கத்தியின்பெயர்—அதிக முத்தக மாதவி வாசந்தி—குருகு நாகரி யிவை, குருக்கத்தியாகும். (௫௪)

உஎ0௪. பலாவின்பெயர்—பாகல் வருக்கை பனசம் பலாவே. (௫௫)

உஎ0௫. ஈரப்பலாவின்பெயர்—ஆசினி பலாச மீரப் பலாவே. (௫௬)

உஎ0௬. மாமரத்தின்பெயர்—மாந்தியுஞ் சூதமுங் கொக்கு மாவு—மாமிரமுமாழையு மாமபி மாகும். (௫எ)

உஎ0எ. புளிமாவின்பெயர்—நாளினி யிபங்க மாழை சிஞ்ச - மாம்பிரமெகினஞ் சூதம் புளிமா. (௫அ)

உஎ0அ. தேமாவின்பெயர்—ஆமிரஞ் சககாரஞ் சேதாரந் தேமா. (௫௯)

உஎ0௯. புளியமரத்தின்பெயர்—சிந்தூரஞ் சிந்தகந் திந்திருணி யெகினஞ் - சஞ்சீவ கரணி யாம்பிலம் புளியே. (௬0)

உஎக0. இலவின்பெயர்—பொங்கர் சான்மலி பூரணியிலவே. (௬க)

உஎகக. இலந்தையின்பெயர்—குல்லரி குவலி கோற்கொடி கோலி—இரத்திவதரி யிலந்தையாகும். (௬உ)

உஎகஉ. இலந்தைப்பழத்தின்பெயர்—அதன்பழங் கோலமுங் கோண்டையுமாகும். (௬௩)

உஎக௩. அத்தியின்பெயர்—அதவே கோளி யுதும்பர மத்தி. (௬௪)

உஎக௪. விளாவின்பெயர்—விளவு கபித்தம் வெள்ளில் விளாவே. (௬௫)

உஎக௫. காயாவின்பெயர்—பூவை யஞ்சனி யல்லிபுன்காலி-காசை வச்சி காயா வாகும், (௬௬)

உஎக௬. களாவின்பெயர்—களவங்களாவே. (௬எ)

---

* குறிஞ்சி மருதோன்றி. இதுஐந்துவகைப்படுதலால் ஐவ்வண்ணம்எனக் காரணப் பெயர்பெறும்.

உகூகசு. பெருங்குறிஞ்சியின்பெயர்—கோரண்டம், குரண்டகம். (உ)

உகூகஎ. பொன்வண்ணக்குறிஞ்சியின்பெயர்—பீதை. (க)

உகூகஅ. வாடாக்குறிஞ்சியின்பெயர்—குரவகம். (க)

உகூகூ. மழைவண்ணக்குறிஞ்சியின்பெயர்—பாணம், நீலி. (உ)

உஎ00. பவளக்குறிஞ்சியின்பெயர்—தீண்டியம்.

உஎ0க. மகரவாழையின்பெயர்—மருகு, தானம். (உ)

உஎ0உ. இருவேலியின்பெயர்—வேரி, பீதகம், மூலகந்தம். (ஈ)

உஎ0ஈ. குருக்கத்தியின்பெயர்—அதிகம், முத்தகம், மாதவி, வாசந்தி, குருகு, நாகரி. (சு)

உஎ0ச. பலாவின்பெயர்—பாகல், வருக்கை, பனசம். (ஈ)

உஎ0ரு. ஈரப்பலாவின்பெயர்—ஆசினி, பலாசம். (உ)

உஎ0சு. மாமரத்தின்பெயர்—மாந்தி, சூதம், கொக்கு, மா, ஆமிரம், மாழை. (சு)

உஎ0எ. புளிமாவின்பெயர்—நாளினி. இபங்கம், மாழை, சிஞ்சம், ஆம்பிரம், எகினம், சூதம். (எ)

உஎ0அ. தேமாவின்பெயர்—ஆமிரம், சககாரம், சேதாரம். (ஈ)

உஎ0கூ. புளியமரத்தின்பெயர்—சிந்தூரம், சிந்தகம், திந்திருணி, எகினம், சஞ்சீவகரணி, ஆம்பிலம். (சு)

உஎக0. இலவின்பெயர்—பொங்கர், சான்மலி, பூரணி. (ஈ)

உஎகக. இலந்தையின்பெயர்—குல்லரி, குவலி, கோற்கொடி, கோலி, இரத்தி, வதரி (சு)

உஎகஉ. இலந்தைப்பழத்தின்பெயர்—கோலம், கோண்டை. (உ)

உஎகஈ. அத்தியின்பெயர்—அதவு, கோளி, உதும்பரம். (ஈ)

உஎகச. விளாவின்பெயர் விளவு, கபித்தம், வெள்ளில். (ஈ)

உஎகரு. காயாவின்பெயர்—பூவை, அஞ்சனி, அல்லி, புன்காலி, காசை, வச்சி. (சு)

உஎகசு. களாவின்பெயர்—களவு. (க)

௨௭௧௭. நுணாவின்பெயர்—தணக்கு நுணாவே. (௬௮)

௨௭௧௮. எலுமிச்சையின்பெயர்—சம்பீர முருகு சதாபலஞ் சம்பள - மருணமிலிகுச மெலுமிச்சையாகும். (௬௯)

௨௭௧௯. நெல்லியின்பெயர்—ஆமலக நெல்லி யாகு மென்ப. (௭0)

௨௭௨0. கடுக்காய்மரத்தின்பெயர்—அரிதகி கடுவேபத்தியங் கடுக்காய்.()

௨௭௨௧. மாதுளையின்பெயர்—மாதுளங்க மாதுளங்கமுமுண்மாதுளையே.

௨௭௨௨. தாதுமாதுளையின்பெயர்—தாடிமந் தாது மாதுளையென்ப. (௭௩)

௨௭௨௩. வில்வத்தின்பெயர்—கூவிளம் வில்வமாலூரங் கூவிளை. (௭௪)

௨௭௨௪. மற்றும்வில்வத்தின்பெயர்—மாவிளம்வில்லுவ மற்றதன்பெயரே.

௨௭௨௫. வஞ்சியின்பெயர்—வானீரம்பிசின் வஞ்சியாகும். (௭௬)

௨௭௨௬. செங்கருங்காலியின்பெயர்—சிறுமாரோடஞ் செங்கருங்காலி. ()

௨௭௨௭. கருங்காலியின்பெயர்—கதிரங்கருங்காலி. (௭௮)

௨௭௨௮. ஈந்தின்பெயர்—கர்ச்சூர மீந்தே. (௭௯)

௨௭௨௯. வெட்பாலையின்பெயர்—குடசங் கிரிமல்லிகை வெட்பாலை. ()

௨௭௩0. அழிஞ்சிலின்பெயர்—அழிஞ்சில் சேமர மங்கோலமாகும். (௮௧)

௨௭௩௧. கடம்பின்பெயர்—கதம்பமும் விசாலமு நீபமுங் கடம்பே.(௮௨)

௨௭௩௨. மற்றுங்கடம்பின்பெயர்—இந்துள மராவும் வந்துழிக் கொளலே

௨௭௩௩. குருந்தமரத்தின்பெயர்—குந்தங்குருந்தே. (௮௪)

௨௭௩௪. செம்பரத்தையின்பெயர்—மந்தாரஞ் செம்பரத்தை யாமெனவுரைப்பர். (௮௫)

௨௭௩௫. வெண்ணொச்சியின்பெயர்—சிந்து வார நீர்க் குண்டி வெண்ணொச்சி. (௮௬)

௨௭௩௬. தேற்றுமரத்தின்பெயர்—சில்ல மில்லங் கதலிகந் தேற்றே.(௮௭)

௨௭௩௭. ஆத்தியின்பெயர்—ஆரோதாதகி சல்லகி யாத்தி. (௮௮)

௨௭௩௮. அகத்தியின்பெயர்—அச்சமுனியே கரிமகத்தி. (௮௯)

௨௭௩௯. பச்சிலைமரத்தின்பெயர்—பச்சிலை தமாலம் பசும்பிடி யாகும். (௯0)

௨௭௪0. முருங்கையின்பெயர்—கருஞ்சனஞ் சிக்குரு முருங்கை யாகும்.

௨௭௪௧. எட்டியின்பெயர்—காளங் காஞ்சிரை கோடர மெட்டி. (௯௨)

௨௭௪௨. சதுரக்கள்ளியின்பெயர்—வச்சிராங்கம் கண்டீர்வ மயிலி-வச்சிரம் விருக்கஞ் சதுரக்கள்ளி. (௯௩)

௨௭௪௩. வாகையின்பெயர்—சிரீடம் பாண்டில் வாகை யாகும். (௯௪)

௨௭௪௪. உடையின்பெயர்—உலவையோடை. (௯௫)

௨௭௪௫. உழிஞ்சிலின்பெயர்—உன்னமுழிஞ்சில். (௯௬)

௨௭௪௬. சிங்கிலியின்பெயர்—முன்னந் தகிந்தி துரிலை சிங்கிலி. (௯௭)

உஎகஎ. நுணாவின்பெயர்—தணக்கு. (க)

உஎகஅ. எலுமிச்சையின்பெயர்—சம்பீரம், முருகு, சதாபலம், சம்பளம், அருணம். இலிகுசம். (சு)

உஎகக. நெல்லியின்பெயர்—ஆமலகம். (க)

உஎஉ0. கடுக்காய்மரத்தின்பெயர்—அரிதகி, கடு, பத்தியம். (௩)

உஎஉக. மாதுளையின்பெயர்—மாதுளங்கம், மாதுளம், கழுமுள். (௩)

உஎஉஉ. தாதுமாதுளையின்பெயர்—தாடிமம். (க)

உஎஉ௩. வில்வத்தின்பெயர்—கூவிளம், மாலூரம், கூவிளை. (௩)

உஎஉச. மற்றும்வில்வத்தின்பெயர்—மாவிளம், வில்லுவம். ஆ (௫)

உஎஉ௫. வஞ்சியின்பெயர்—வானீரம், பிசின். (உ)

உஎஉசு. செங்கருங்காலியின்பெயர்—சிறுமாரோடம். (க)

உஎஉஎ. கருங்காலியின்பெயர்—கதிரம். (க)

உஎஉஅ. ஈந்தின்பெயர்—கர்ச்சூரம். (க)

உஎஉக. வெட்பாலையின்பெயர்—குடசம், கிரிமல்லிகை. (உ)

உஎ௩0. அழிஞ்சிலின்பெயர்—சேமரம், அங்கோலம். (உ)

உஎ௩க. கடம்பின்பெயர்—கதம்பம், விசாலம், நீபம். (௩)

உஎ௩உ. மற்றுங்கடம்பின்பெயர்—இந்துளம், மரா. ஆ (௫)

உஎ௩௩. குருந்தமரத்தின்பெயர்—குந்தம். (க)

உஎ௩ச. செம்பரத்தையின்பெயர்—மந்தாரம். (க)

உஎ௩௫. வெண்ணொச்சியின்பெயர்—சிந்துவாரம், நீர்க்குண்டி. (உ)

உஎ௩சு. தேற்றுமரத்தின்பெயர்—சில்லம், இல்லம், கதலிகம். (௩)

உஎ௩எ. ஆத்தியின்பெயர்—ஆர், தாதகி, சல்லகி. (௩)

உஎ௩அ. அகத்தியின்பெயர்—அச்சம், முனி, கரீரம். (௩)

உஎ௩க. பச்சிலைமரத்தின்பெயர்—தமாலம்,பசும்பிடி. (உ)

உஎச0. முருக்கையின்பெயர்—கருஞ்சனம், சிக்குரு. (உ)

உஎசக. எட்டியின்பெயர்—காளம், காஞ்சிரை, கோடரம். (௩)

உஎசஉ. சதுரக்கள்ளியின்பெயர்—வச்சிராங்கம், கண்டீரவம், அயிலி, வச்சிரவிருக்கம். (ச)

உஎச௩. வாகையின்பெயர்—சிரீடம், பாண்டில். (உ)

உஎசச. ஓடையின்பெயர்—உலவை. (க)

உஎச௫. உழிஞ்சிலின்பெயர்—உன்னம். (க)

உஎசசு. சிக்கிரியின்பெயர்—முன்னம், துரிஞ்சில், உசிலை. (௩)

உ௭௪௭. இலுப்பையின்பெயர்—குலிக மிருப்பை மதூகமிலுப்பை. (௯௮)

உ௭௪௮. மற்றுமிலுப்பையின்பெயர்—சந்தானகரணி யெனவுஞ் சாற்றும்.

உ௭௪௯. தெங்கின்பெயர்—தாழையிலாங்கலி தென்னையுந் தெங்கே. (௧00)

உ௭௫0. மற்றுந்தெங்கின்பெயர்—நாளி கேர மென்பது நவிலும். (௧0௧)

உ௭௫௧. பன்னாடையின்பெயர்—நாரி நெய்யரி யதன்பன்னாடை. (௧0௨)

உ௭௫௨. கமுகின்பெயர்—கந்தி பூகம் பூக்கமுங் கமுகே. (௧0௩)

உ௭௫௩. கூந்தற்கமுகின்பெயர்—தாலங்கூந்தற் கமுகாகும்மே. (௧0௪)

உ௭௫௪. பாக்கின்பெயர்—கோலந் துவர்க்காய் பாகு பாக்கே. (௧0௫)

உ௭௫௫. பனையின்பெயர்—போந்துதாலம் பெண்ணைபுற்பதி - தாளிகரும் புறம்புற்றாளியும்பனை. (௧0௬)

உ௭௫௬. இளம்பனையின்பெயர்—போந்தையிளம்பனை. (௧0௭)

உ௭௫௭. கூந்தற்பனையின்பெயர்—தாளிகூந்தற்பனை. (௧0௮)

உ௭௫௮. வாழையின்பெயர்—கதலி யரம்பை கவசோ சேகிலி - திரணபதி யோசை வாழையின்பெயரே. (௧0௯)

உ௭௫௯. மூங்கிலின்பெயர்—வெதிரும் வேயும் விண்டும் விண்டலும் - பணையுநெடிலும் வரையு மரியுந்—தட்டையுந் திகிரியுந் தடமு மமையும் - வேரலுங் கழையுந் தூம்பும் வேழமுங்-காம்புங் கிளையுங் கீசகமும் வேணு - மோங்கலு முளையு முடங்கலுஞ் சந்தியு- மூங்கிலின் பெயர் மூந்நூழு மாகும். (௧௧0)

உ௭௬0. மற்றுமூங்கிலின்பெயர்—சானகி திரிக ணேமி பாதிரி-யாம்பற்றளையுஞ் சபமுமதன்பெயர். (௧௧௧)

உ௭௬௧. மூங்கிலரிசியின்பெயர்—வேர ற்றோ மூங்கிலரிசிப்பெயர். ()

உ௭௬௨. தாழையின்பெயர்—முண்டக மடியே கைதை முடங்கல்- கண்டல் கேதகை முசலிதாழை. (௧௧௩)

உ௭௬௩. பட்டிகையின்பெயர்—பறிவைபட்டிகை. (௧௧௪)

உ௭௬௪. கரும்பின்பெயர்—கழைவேழ மிக்குக் கன்னல்கரும்பே. (௧௧௫)

உ௭௬௫. பூவாதுகாய்க்குமரத்தின்பெயர்—கோளி பூவாது காய்க்கு மரமே. (௧௧௬)

உ௭௬௬. மற்றும்பூவாதுகாய்க்குமரத்தின்பெயர்—வானரப் பிரத்தி பத்திமும் வனையார். (௧௧௭)

உ௭௬௭. வண்டுணுமலர்மரமாவன—சண்பகமும் வேங்கையும் வண்டுணு மலர்மரம். (௧௧௮)

உ௭௬௮. வன்னிமரத்தின்பெயர்—கலிசஞ் சமியே குலிசம்வன்னி. ()

உ௭௬௯. ஓமைமரத்தின்பெயர்—ஓமையுகாவே. (௧௨0)

உ௭௭0. புனமுருங்கையின்பெயர்—புன்குபுனமுருங்கை. (௧௨௧)

உஎசஎ. இலுப்பையின்பெயர்—குலிகம், இருப்பை, மதூகம். (௩)

உஎசஅ. மற்றுமிலுப்பையின்பெயர்—சந்தானகரணி. ஆ (௪)

உஎசகூ. தெங்கின்பெயர்—தாழை, இலாங்கலி, தென்னை. (௩)

உஎ௫௦. மற்றுந்தெங்கின்பெயர்—நாளிகேரம். ஆ (௪)

உஎ௫க. பன்னாடையின்பெயர்—நாரி, நெய்யரி. (௨)

உஎ௫உ. கமுகின்பெயர்—கந்தி, பூகம், பூக்கம். (௩)

உஎ௫௩. கூந்தற்கமுகின்பெயர்—தாலம். (க)

உஎ௫௪. பாக்கின்பெயர்—கோலம், துவர்க்காய், பாகு. (௩)

உஎ௫௫. பனையின்பெயர்—போந்து, தாலம், பெண்ணை, புற்பதி, தாளி கரும்புறம், புற்றளி. (எ)

உஎ௫௬. இளம்பனையின்பெயர்—போந்தை. (க)

உஎ௫எ. கூந்தற்பனையின்பெயர்—தாளி. (க)

உஎ௫அ. வாழையின்பெயர்—கதலி, அரம்பை, கவர், சேகிலி, திரணபதி ஓசை. (௬)

உஎ௫௯. மூங்கிலின்பெயர்—வெதிர், வேய், விண்டு, விண்டல், பணை, நெடில், வரை, அரி, தட்டை, திகிரி, தடம், அமை, வேரல், கழை, தூம்பு, வேழம், காம்பு, கிளை, கீசகம், வேணு, ஓங்கல், முளை, முடங்கல், சந்தி, மூங்தூழ் (உ௫)

உஎ௬௦. மற்றுமூங்கிலின்பெயர்—சானகி, திரிகண், நேமி, பாதிரி, ஆம்பல், தொளை, சபம். ஆ (௬உ)

உஎ௬க. மூங்கிலரிசியின்பெயர்—வேரல், தோரை. (உ)

உஎ௬உ. தாழையின்பெயர்—முண்டகம், மடி, கைதை, முடங்கல், கண்டல், கேதகை, முசலி. (எ)

உஎ௬௩. பட்டிகையின்பெயர்—பறிவை. (க)

உஎ௬௪. கரும்பின்பெயர்—கழை, வேழம், இக்கு, கன்னல். (௪)

உஎ௬௫. பூவாதுகாய்க்குமரத்தின்பெயர்—கோளி. (க)

உஎ௬௬. மற்றும்பூவாதுகாய்க்குமரத்தின்பெயர்—வானப் பிரத்தி, பத்தியம். (உ)

உஎ௬எ. வண்டுறைமலர்மரமாவன—சண்பகம், வேங்கை. (உ)

உஎ௬அ. வன்னிமரத்தின்பெயர்—கலிசம், சமி, குலிசம் (௩)

உஎ௬௯. ஓமைமரத்தின்பெயர்—உகா. (க)

உஎஎ௦. புனமுருங்கையின்பெயர்—புன்கு. (க)

உளஎக. ஒடுவின்பெயர்—ஒடுவேயுடுப்பை. (கஉஉ)

உளஎஉ. புன்கின்பெயர்—நத்தமாலம் புன்கு காஞ்சனமு நவிலும். ()

உளஎ௩. ஆண்மரத்தின்பெயர்—எகினே சேமர மாண்மர மென்ப. ()

உளஎ௪. பராய்மரத்தின்பெயர்—பசுநாவிட்டில்புக்குப்பராய்மரம் (கஉ௫)

உளஎ௫. நறுவிலியின்பெயர்—அலியுஞ்செலுவும் வலியு நறுவிலி. (கஉ௬)

உளஎ௬. செம்புளிச்சையின்பெயர்—தேவ தாரஞ் செம் புளிச்சை யென்ப. (கஉஎ)

உளஎஎபுனவெலுமிச்சையின்பெயர்—புனவெலு மிச்சை குருந்தெனப் புகலுவர். (கஉஅ)

உளஎஅ. எருக்கின்பெயர்—அருக்கஞ் சல்லியகரணி யெருக்கே. (கஉகூ)

உளஎகூ. ஆமணக்கின்பெயர்—எரண்டஞ்சித்திரமென்பதாமணக்கே. ()

உளஅ0. பருத்தியின்பெயர்—பரியேபன்னல் கார்ப் பாசம்பருத்தி.(க௩க)

உளஅக. மருந்தென்னும்பெயர்—புல்லு மரனும் புதலும் பூடும் - வல்லியும் பெயர்பெறுமருந்துச் சஞ்சிவி. (க௩உ)

உளஅஉ. நால்வகைமருந்தாவன—சல்லிய கரணி சந்தான கரணி - சமனியகரணி முதலி லுதித்த - மிருதசஞ்சீவனி மருந்துநால் வகையே. க௩௩

உளஅ௩. அத்திரசத்திரந்தைத்த புண்மாற்றுமருந்தின்பெயர்—தைத்தவத்திரஞ் சத்திரந்தணிக்கு—மெய்த்தருமருந்தேசல்லிய கரணி. க௩௪

உளஅ௪. துணிபட்டவுறுப்பினைப் பொருத்துமருந்தின்பெயர்—துண்டமான வுறுப்புத் துணியினைச். சந்து செய் மருந்தே சந்தானகரணி. (க௩௫)

உளஅ௫. விரணந்தழும்புகளைநீக்குமருந்தின்பெயர்—விரணமுந் தழும்பு நீக்கி மெய்யினைத்—தகைமைசெய் மருந்தே சமனியகரணி. (க௩௬)

உளஅ௬. உயிர்தருமருந்தின்பெயர்—உயிர்தருமருந்தே மிருதசஞ்சீவனி.

உளஅஎ. மற்றுமுயிர்தருமருந்தின்பெயர்—அதகமுமமுதுஞ் சீவனியுமென்ன—வுயிர்தரு மருந்தினுறுபெயராகும். (க௩அ)

உளஅஅ. நோய்தீர்க்குமருந்தின்பெயர்—உறுநோய்தீர்க்கும் மருந்துறையென்ப. (க௩௯)

உளஅகூ. மருந்தின்பெயர்—உறையே குளிய மோடதி யௌடத - மதகமும் யோகமு மருந்தெனலாகும். (க௪0)

உளகூ0. மரப்பொதுவின் பெயர்—பாதபந் தாரு தருவே தாவர-மோதிய மூலமரப்பொதுப்பெயரே. (க௪க)

உளகூக. மற்றுமரப்பொதுப்பெயர்—அகமேயங் கிரி விருக்கந் துரும-மகலியஞ் சாதியென் றனைத்து மப்பெயரே. (க௪உ)

உஎஎக. ஓடுவின்பெயர்—உடுப்பை. (க)

உஎஎஉ. புன்கின்பெயர்—நத்தமாலம், காஞ்சனம். (உ)

உஎஎ௩. ஆண்மரத்தின்பெயர்—எகின், சேமரம். (உ)

உஎஎ௪. பராய்மரத்தின்பெயர்—பசுநா, விட்டில், புக்கு. (௩)

உஎஎ௫. நறுவிலியின்பெயர்—அலி, செலு,வலி. (௩)

உஎஎ௬. செம்புளிச்சையின்பெயர்—தேவதாரம் (க)

உஎஎஎ. புனவெலுமிச்சையின்பெயர்—குருந்து. (க)

உஎஎஅ. எருக்கின்பெயர்—அருக்கம், சல்லியகரணி. (உ)

உஎஎ௯. ஆமணக்கின்பெயர்—ஏரண்டம், சித்திரம். (உ)

உஎஅ0. பருத்தியின்பெயர்—பரி, பன்னல், கார்ப்பாசம். (௩)

உஎஅக. மருந்தென்னும்பெயர்—புல், மரம், புதல், பூடு, வல்லி-கொடி சஞ்சீவி. (எ)

உஎஅஉ. நால்வகைமருந்தாவன—சல்லியகரணி, சந்தானகரணி, சமனிய கரணி, மிருதசஞ்சீவனி. (௪)

உஎஅ௩. அத்திரசததிரந்தைத்த புண்மாற்றுமருந்தின்பெயர்—சல்லியகர ணி. (க)

உஎஅ௪. துணிபட்ட வுறுப்பினைப்பொருத்து மருந்தின்பெயர்—சந்தான கரணி. (க)

உஎஅ௫. விரணந்தழும்புகளைநீக்குமருந்தின்பெயர்—சமனியகரணி. (க)

உஎஅ௬. உயிர்தருமருந்தின்பெயர்—மிருதசஞ்சீவனி. (க)

உஎஅஎ. மற்றுமுயிர்தருமருந்தின்பெயர்—அதகம்,அமுது,சீவனி,ஆ (௪)

உஎஅஅ. நோய்தீர்க்குமருந்தின்பெயர்—உறை. (க)

உஎஅ௯. மருந்தின்பெயர்—உறை, குளியம், ஓடதி, ஔடதம், அதகம், யோகம். (௬)

உஎ௯0. மரப்பொதுவின்பெயர்—பாதபம், தாரு, தரு, தாவரம், மூலம் (௫)

உஎ௯க. மற்றுமரப்பொதுப்பெயர்—அகம், அங்கிரி, விருக்கம, துருமம் அகலியம், சாதி. (௬)

௨௭௩௨. மரக்கன்றின்பெயர்—போதகம் பிள்ளைபோத்துக் குழவி-காலின மரத்தின் கன்றின்பெயரே. (௧௪௩)

௨௭௩௩. மரவுரியின்பெயர்—மரத்தோல் வற்கலை சீரை மரவுரி. (௧௪௪)

௨௭௩௪. மற்றுமரவுரியின்பெயர்—இறைஞ்சியு மதற்கு வியைந்த பெயரே. (௧௪௫)

௨௭௩௫. மரக்கொம்பின்பெயர்—கோடே விடபங் கோடரம் பொங்கர்-சாகை கவடு வுலவை தாருச்-சினைபணை கொம்பர் கவலைமரக்கொம்பே. (௧௪௬)

௨௭௩௬. சேகின்பெயர்—சம்ப மாசினி காழே காழ்ப்புச்-சாரம் வயிரங் கலையரி சேகெனல். (௧௪௭)

௨௭௩௭. தழையின்பெயர்—உலவை தழையே. (௧௪௮)

௨௭௩௮. கப்பின்பெயர்—கவையுங் கவரும் கப்பெனலாகும். (௧௪௯)

௨௭௩௯. இளங்கொம்பின்பெயர்—வளாஅர் மெல்லியன் மற்றிளங்கொம்பே. (௧௫0)

௨௮00. தளிரின்பெயர்—வல்லரி குழைமுறி மஞ்சரி கிசலயம்-பல்லவ மலங்கல்கிளை பைந்தளிரெனல். (௧௫௧)

௨௮0௧. தளிர்த்தலின்பெயர்—இலிர்த்தலுஞ் சிலிர்த்தலுங் குழைத்தலுந் தளிர்த்தல். (௧௫௨)

௨௮0௨. அடிவெண்குருத்தின்பெயர்—முருந்தே முதலிற் செறிவெண் குருத்தே. (௧௫௩)

௨௮0௩. மலர்க்கொத்தின்பெயர்—தொத்துமஞ்சரி துணரிணர் தொடர்ச்சி-மற்றிவையனைத்து மலர்க்கொத்தென்ப. (௧௫௪)

௨௮0௪. இலையின்பெயர்—பலாசம் பன்னம் பத்திரந்தகடு-பாசடைதண்ணடை சாகை தமால—மோலைதழை பச்சிலை யுலவையடை யிலைப் பெயர். (௧௫௫)

௨௮0௫. மற்றுமிலையின்பெயர்—சதனஞ் சதம்பத் திரிதலமு மாகும். ()

௨௮0௬. பரலினுட்படுகுருத்தின்பெயர்—பயினே பரலி னுட்படு குருத்தே. (௧௫௭)

௨௮0௭. மொட்டின்பெயர்—கலுவட நனைமுகை கன்னிகை யரும்பே-முகிளங் கலிகை சாலகங் கோரகம்-போகினகை மலரு மொக்குண்மொட்டென்ப. (௧௫௮)

௨௮0௮. மலரின்பெயர்—தாமங் குசுமந் தாரேயலர்வீ-போதுசுண்ணஞ் சுமனசம் பூவே-சுமந்துண ரலரி யாலநன் மலர்ப்பெயர். (௧௫௯)

உ௭௯௨. மரக்கன்றின்பெயர்—போதகம், பிள்ளை, போத்து, குழவி, கால். (௫)

உ௭௯௩. மரவுரியின்பெயர்—மரத்தோல், வற்கலை, சீரை. (௩)

உ௭௯௪. மற்றுமரவுரியின்பெயர்—இறைஞ்சி. ஆ (௪)

உ௭௯௫. மரக்கொம்பின் பெயர்—கோடு, விடபம், கோடரம், பொங்கர், சாகை, கவடு, உலவை, தாரு, சினை, பணை, கொம்பர், கவலை. (௧௨)

உ௭௯௬. வைரத்தின்பெயர்—சம்பம், ஆசினி, காழ், காழ்ப்பு, சாரம், வயிரம், கலை, அரி. (௮)

உ௭௯௭. தழையின்பெயர்—உலவை. (௧)

உ௭௯௮. கப்பின்பெயர்—கவை, கவர். (௨)

உ௭௯௯. இளங்கொம்பின்பெயர்—வளார், மெல்லியல். (௨)

உ௮00. தளிரின்பெயர்—வல்லரி, குழை, முறி, மஞ்சரி, கிசலயம், பல்லவம், அலங்கல், கிளை. (௮)

உ௮0௧. தளித்தலின்பெயர்—இலிர்தல், சிலிர்த்தல், குழைத்தல். (௩)

உ௮0௨. அடிவெண்குருத்தின்பெயர்—முருந்து. (௧)

உ௮0௩. மலர்க்கொத்தின்பெயர்—தொத்து, மஞ்சரி, துணர், இணர், தொடர்ச்சி. (௫)

உ௮0௪. இலையின்பெயர்—பலாசம், பன்னம், பத்திரம், தகடு, பாசடை தண்ணடை, சாகை, தமாலம், ஓலை, தழை, பச்சிலை, உலவை, அடை. (௧௩)

உ௮0௫. மற்றுமிலையின்பெயர்—சதனம், சதம், பத்திரி, தலம். ஆ (௧௭)

உ௮0௬. பாலினுட்படுகுருத்தின்பெயர்—பயின். (௧)

உ௮0௭. மொட்டின்பெயர்—சலுவடம், நனை, முகை, கன்னிகை, அரும்பு, முகிளம், கலிகை, சாலகம், கோரகம், போகில், நகை, மொக்குள். (௧௨)

உ௮0௮. மலரின்பெயர்—தாமம், குசுமம், தார், அலர், வீ, போது, சுண்ணம், சுமனசம், பூ, சுமம், துணர், அலரி, ஆலம். (௧௩)

உ௮0௯. மலர்த்தாதின்பெயர்—கோசர மகரஞ் சிதரோ கொங்கு-கேசரந்துணரிணர் இளர்மலர்த்தாதே. (௧௬0)

உ௮௧0. தாதின்றாளின்பெயர்—மகரந்தஞ் சுண்ணந் தாதின் றாளே. ()

உ௮௧௧. மற்றுந்தாதின்றாளின்பெயர்—பராக மென்றும் பகரப் பெறுமே.

உ௮௧உ. மலர்த்தேனின்பெயர்—மகரந்தமலர்த்தேன். (௧௬௩)

உ௮௧௩. பூவிதழின்பெயர்—தாது மதழுந் தண்டுந்தோடு - மேடும் பூவினிதழ்ப்பெய ரென்ப, (௧௬௪)

உ௮௧௪. அசவிதழின்பெயர்—அல்லியகவிதழ். (௧௬௫)

உ௮௧௫. புறவிதழின்பெயர்—புல்லிபுறவிதழ், (௧௬௬)

உ௮௧௬. மரத்தின்குலையின்பெயர்—தாறும் படவுஞ் சாறுங் குடும்புங் - கோடுங் கொத்துமரத்தின்குலையே. (௧௬௭)

உ௮௧௭. முளையின்பெயர்—காலேயங்குர முளையெனலாகும். (௧௬௮)

உ௮௧௮. வேரின்பெயர்—தூருஞ் சடையுஞ் சிவையும்வேரோ. (௧௬௯)

உ௮௧௯. கிழங்கின்பெயர்—மூல மூலகங் சந்தங் கிழங்கே. (௧௭0)

உ௮உ0. மற்றுங்கிழங்கின்பெயர்—சகுன மெனவுஞ் சாற்றப் பெறுமே.

உ௮உ௧. சிற்றரும்பின்பெயர்—முகைமுகிழ் மொக்குண் முகிளஞ் சிற்றரும்பே. (௧௭உ)

உ௮உஉ. உலர்ந்தபூவின்பெயர்—உணங்க்ல் சாம்பல் வாடலுலர்ந்த பூ.

உ௮உ௩. மலர்ச்சியின்பெயர்—அலர்த லவிழ்தல் விள்ள னகுதன் - மலர்தல் விரிதன் மலர்ச்சிப்பெயரோ. (௧௭௪)

உ௮உ௪. விரிமலரின்பெயர்—இகமலர் வெதிர்தொடர்ப்பூவிரிமலரே. ()

உ௮உ௫. பழம்பூவின்பெயர்—செம்மல் சாம்பறேம்பலும் பழம்பூ. (௧௭௬)

உ௮உ௬. விதையின்பெயர்—வீசம்பரலே விச்சுவினாவிதை, (௧௭௭)

உ௮உ௭. மற்றும்விதையின்பெயர்—காழுங் கொட்டையு மாகு மென்ப.

உ௮உ௮. பிஞ்சின்பெயர்—வடுவெனுப்பிஞ்சு. (௧௭௯)

உ௮உ௯. பசுங்காயின்பெயர்—திவிளிபசுங்காய். (௧௮0)

உ௮௩0. பழத்தின்பெயர்...பலமுங் கனியும் பழமென்றாகும் (௧௮௧)

உ௮௩௧. கனித்தோலின்பெயர்—கனித்தோல்செகிளுங் காழு மாகும்.

உ௮௩உ. காய்மரத்தின்பெயர்—பலினங்காய்மரம. (௧௮௩)

உ௮௩௩. காயாதமரத்தின்பெயர்—அவகேசியலாமரம். (௧௮௪)

உ௮௩௪. தழைமரத்தின்பெயர்—மலினந்தழைமரம். (௧௮௫)

உ௮௩௫. உலர்மரத்தின்பெயர்—வானமுலர்மரம். (௧௮௬)

உ௮௩௬. ஆண்மரத்தின்பெயர்—அகக்காழ் வன்மர மாண்மரமாகும். ()

உ௮௩௭. பெண்மரத்தின்பெயர்—புறக்காழ் புன்மரம் பெண்மர மென்ப.

உஅ௦கூ. மலர்த்தாதின்பெயர்—கோசரம், மகரம், சிதர், கொங்கு, கேசரம், துணர், இணர், கிளர். (அ)

உஅக௦. தாதின்றாளின்பெயர்—மகரந்தம், சுண்ணம். (உ)

உஅகக. மற்றுந்தாதின்றாளின்பெயர்—பராகம். (க)

உஅகஉ. மலர்த்தேனின்பெயர்—மகரந்தம். (க)

உஅகங. பூவிதழின்பெயர்—தாது, அதழ், தண்டு, தோடு, ஏடு. (ரு)

உஅகச. அகவிதழின்பெயர்—அல்லி. (க)

உஅகரு. புறவிதழின்பெயர்—புல்லி. (க)

உஅகசு. மரத்தின்குலையின்பெயர்—தாறு, படு, சாறு, குடம்பு, கோடு, கொத்து. (சு)

உஅகஎ. முளையின்பெயர்—கால், அங்குரம். (உ)

உஅகஅ. வேரின்பெயர்—தூர், சடை, சிவை. (ங)

உஅககூ. கிழங்கின்பெயர்—மூலம், மூலகம், கந்தம். (ங)

உஅஉ௦. மற்றுங்கிழங்கின்பெயர்—சகுனம். (க)

உஅஉக. சிற்றரும்பின்பெயர்—முகை, முகிழ், மொக்குள், முகிளம். (ச)

உஅஉஉ. உலர்ந்தபூவின்பெயர்—உணங்கல், சாம்பல், வாடல். (ங)

உஅஉங. மலர்ச்சியின்பெயர்—அலர்தல், அவிழ்தல், விள்ளல், நகுதல், மலர்தல், விரிதல். (சு)

உஅஉச. விரிமலரின்பெயர்—இகமலர், வெதிர், தொடர்ப்பூ. (ங)

உஅஉரு. பழம்பூவின்பெயர்—செம்மல், சாம்பல், தேம்பல். (ங)

உஅஉசு. விதையின்பெயர்—வீசம், பரல், விச்சு, விரை. (ச)

உஅஉஎ. மற்றும்விதையின்பெயர்—காழ், கொட்டை. ஆட (க)

உஅஉஅ. பிஞ்சின்பெயர்—வடு, எலு. (உ)

உஅஉகூ. பசுங்காயின்பெயர்—தீவிளி. (க)

உஅங௦. பழத்தின்பெயர்—பலம், கனி. (உ)

உஅஙக. கனித்தோலின்பெயர்—செகிள், காழ். (உ)

உஅஙஉ. காய்மரத்தின்பெயர்—பலினம். (க)

உஅஙங. காயாதமரத்தின்பெயர்—அவகேசி (க)

உஅஙச. தழைமரத்தின்பெயர்—மலினம். (க)

உஅஙரு. உலர்மரத்தின்பெயர்—வானம். (க)

உஅஙசு. ஆண்மரத்தின்பெயர்—அகக்காழ், வன்மரம். (உ)

உஅஙஎ. பெண்மரத்தின்பெயர்—புறக்காழ், புன்மரம். (உ)

உ௮௩௮. அலிமரத்தின்பெயர்—இருதிறத் தலாதன மரமலி வெளிறே.

உ௮௩௯. இலைக்கறியின்பெயர்—அடைசாகம் பன்னமடகு மிலைக்கறி.

உ௮௪௦. சோலையின்பெயர்—அரிநக் தனவனக் தண்டலை பொழிலே- யாராமந் துடவை தோட்டமுய் யான- முபவன முத்தியானஞ் செய்கான்மர ச்செறிவு - சோலை யிளமரக் காவெனச் சொல்லும். (௧௯௧)

உ௮௪௧. ஊரொடுசேர்ந்த சோலையின்பெயர்—ஊரொடு சேர்ந்த சோலை வன மென்ப. (௧௯௨)

உ௮௪௨. மலையொடு சேர்ந்த சோலையின்பெயர்—மலையொடு சேர்ந்த சோலையா ராமம். (௧௯௩)

உ௮௪௩, கழிக்கரைச்சோலையின்பெயர்—கான லென்பது கழிக்கரைச் சோலை. (௧௯௪)

உ௮௪௪. செய்குன்று சேர்ந்தசோலையின்பெயர்—செய்குன்று சேர்ந்த சோலைதோப் பாகும். (௧௯௫)

உ௮௪௫. வயல்சூழ் சோலையின்பெயர்—வயல்சூழ்சோலை யிளமரக் கா வே. (௧௯௬)

உ௮௪௬. சிறுதூற்றின்பெயர்—அரிலு மறலும் பதுக்கையுஞ் சிறுதூறு.

உ௮௪௭. குறுங்காட்டின் பெயர்—குறுங்காட்டின் பெய ரிறும்பென மொழிப. (௧௯௮)

உ௮௪௮. பெருங்காட்டின்பெயர்—பெருங்காடு வல்லை யெனப்பெயர் பெறுமே. (௧௯௯)

உ௮௪௯. காவற்காட்டின்பெயர்—கணைய மிளையரண் காவற் காடே. ()

உ௮௫௦. முதுகாட்டின்பெயர்—முதையே யிலை யுதிர் வுமுதுகாடெ ன்ப. (உ௦௧)

உ௮௫௧. கரிகாட்டின்பெயர்—பொச்சையுஞ் சுரமும் பொதிகரி காடே.

உ௮௫௨. வேலியின்பெயர்—அடைப்புங் காப்பும் வேலியாகும். (உ௦௩)

உ௮௫௩. மரப்பொந்தின்பெயர்—பொக்குப் பொத்துப்பொய் பொதும்பு பொள்ளல் - பொந்தாமரமெனப் புகன்றனர் புலவர். (உ௦௪)

உ௮௫௪. முள்ளின்பெயர்—கண்டகமுள்ளே கடுவுமாகும். (உ௦௫)

உ௮௫௫. தூற்றின்பெயர்—இறும்பே மிடைதூ றெனவிளம் பினரே.

உ௮௫௬. மரச்செறிவின்பெயர்—பொதும்பர் கோடர முலவைமரச்செ றிவே. (உ௦௭)

உ௮௫௭. விறகின்பெயர்—முளரி கறலே முருடுகொழ் காட்ட - ஞெகிழி யிந்தனஞ் சமிதைநீள் விறகே. (உ௦௮)

உ௮௫௮. முட்செடிப்பொதுவின்பெயர்—முளரி முண்டக முட்செடிப் பொதுவே. (உ௦௯)

௨௮௩௮. அலிமரத்தின்பெயர்—வெளிறு. (௧)

௨௮௩௯. இலைக்கறியின்பெயர்—அடை, சாகம், பன்னம், அடகு. (௪)

௨௮௪௦. சோலையின்பெயர்—அரி, நந்தனவனம், தண்டலை, பொழில், ஆராமம், துடவை, தோட்டம், உய்யானம், உபவனம், உத்தியானம், செய்கால், மரச்செறிவு, இளமரக்கா. (௧௩)

௨௮௪௧. ஊரொடுசேர்ந்த சோலையின்பெயர்—வனம். (௧)

௨௮௪௨. மலையொடு சேர்ந்த சோலையின்பெயர்—ஆராமம். (௧)

௨௮௪௩. கழிக்கரைச்சோலையின்பெயர்—கானல். (௧)

௨௮௪௪. செய்குன்றுசேர்ந்த சோலையின்பெயர்—தோப்பு. (௧)

௨௮௪௫. வயல்சூழ் சோலையின்பெயர்—இளமரக்கா. (௧)

௨௮௪௬. சிறுதூற்றின்பெயர்—அரில், அறல், பதுக்கை. (௩)

௨௮௪௭. குறுங்காட்டின்பெயர்—இறும்பு. (௧)

௨௮௪௮. பெருங்காட்டின்பெயர்—வல்லை. (௧)

௨௮௪௯. காவற்காட்டின்பெயர்—கணையம், இளை, அரண். (௩)

௨௮௫௦. முதுகாட்டின்பெயர்—முதை, இலையுதிர்வு. (௨)

௨௮௫௧. கரிகாட்டின்பெயர்—பொச்சை, சுரம், பொதி. (௩)

௨௮௫௨. வேலியின்பெயர்—அடைப்பு, காப்பு. (௨)

௨௮௫௩. மரப்பொந்தின்பெயர்—பொக்கு, பொத்து, பொய், பொதும்பு, பொள்ளல். (௫)

௨௮௫௪. முள்ளின்பெயர்—கண்டகம், கடு. (௨)

௨௮௫௫. தூற்றின்பெயர்—இறும்பு, மிடை. (௨)

௨௮௫௬. மரச்செறிவின்பெயர்—பொதும்பர், கோடரம், உலவை. (௩)

௨௮௫௭. விறகின்பெயர்—முளரி, கறல், முருடு, காழ், காட்டம், ஞெகிழி, இந்தனம், சமிதை. (௮)

௨௮௫௮. முட்செடிப்பொதுவின்பெயர்—முளரி, முண்டகம். (௨)

உ௮௫௯. விரிதூற்றின்பெயர்—அதிரல்விரிதூறு. (உ௧0)

உ௮௬0. சுண்டியின்பெயர்—சுச்சுச்சுண்டி. (உ௧௧)

உ௮௬௧. வறட்சுண்டியின்பெயர்—சுமங்கை வறட்சுண்டி. (உ௧௨)

உ௮௬௨. ஆவிரையின்பெயர்—பகரியாவிரை. (உ௧௩)

உ௮௬௩. வஞ்சியின்பெயர்—வானீரம் வஞ்சுளம் வஞ்சியாகும். (உ௧௪)

உ௮௬௪. நுத்தியின்பெயர்—கோளியந்நுத்தி. (உ௧௫)

உ௮௬௫. ஆடாதோடையின்பெயர்—ஆடா தோடை வாசை யாகும்.

உ௮௬௬. சித்திரமூலத்தின்பெயர்—சித்திர மூலங் கொடிவேலி யாகும்.

உ௮௬௭. தும்பையின்பெயர்—துரோணந்தும்பை. (உ௧௮)

உ௮௬௮. சுரையின்பெயர்—தும்பியு மலாபுஞ் சுரையா கும்மே. (உ௧௯)

உ௮௬௯. மரலின்பெயர்—அரலை மரலாம். (உ௨0)

உ௮௭0. கற்றாழையின்பெயர்—குமரிகற்றாழை. (உ௨௧)

உ௮௭௧. நாயுருவியின்பெயர்—கரமஞ் சரிநா யுருவி யாகும். (உ௨௨)

உ௮௭௨. கொழிஞ்சியின்பெயர்—கோளியென்றாகும். (உ௨௩)

உ௮௭௩. ஊமத்தையின்பெயர்—உன்மத்த மூமத்தை. (உ௨௪)

உ௮௭௪. கஞ்சாவின்பெயர்—கஞ்சங் குல்லை கஞ்சாவாகும். (உ௨௫)

உ௮௭௫. பொன்னூமத்தையின்பெயர் — மதமத்தை பொன் னூமத்தை யாகும். (உ௨௬)

உ௮௭௬. நீலியின்பெயர்—அவுரி பத்திய நீலி யாகும். (உ௨௭)

உ௮௭௭. துழாயின்பெயர்—குல்லைமுடி துளவம் வனமுந் துழாயெனல் ()

உ௮௭௮. மற்றுந்துழாயின்பெயர்—பிருந்தமு மப்பெயர் பேசப் பெறுமே. (உ௨௯)

உ௮௭௯. தூதுளையின்பெயர்—தூதுளந் தூதுளை. (உ௩0)

உ௮௮0. வீழியின்பெயர்—விழுமிவீழி. (உ௩௧)

உ௮௮௧. காஞ்சொறியின்பெயர்—கண்டூதிகாஞ்சொறி. (உ௩௨)

உ௮௮௨. கிலுகிலுப்பையின்பெயர்—பகன்றைகிலுகிலுப்பை. (உ௩௩)

உ௮௮௩. தண்ணீர்க்குடத்தின்பெயர்—கான வாழை தண்ணீர்க்குடமே.

உ௮௮௪. பிரம்பின்பெயர்—சாதி வேத்திரஞ் சூரல் பிரம்பே. (உ௩௫)

உ௮௮௫. கழற்கொடியின்பெயர்—கழங்கு முழல் கர்ச்சூரங் கொடிக்கழல்.

உ௮௮௬. கழற்காயின்பெயர்—கழற்காய் முழலுங் கழங்கு மாகும். (உ௩௭)

உ௮௮௭. இண்டின்பெயர்—இண்டை புலிதொடக்கி யீங்கை யீங்கை யிண்டென்ப. (உ௩௮)

உ௮௮௮. சூரியின்பெயர்—விந்தஞ்சூரி. (உ௩௯)

உ௮௮௯. புனற்றுளசியின்பெயர்—குல்லைபுனற்றுளசி. (உ௪0)

௨௮௫௯. விரினூற்றின்பெயர்—அதிரல். (௧)

௨௮௬௦. சுண்டியின்பெயர்—சுச்சு. (௧)

௨௮௬௧. வறட்சுண்டியின்பெயர்—சுமங்கை. (௧)

௨௮௬௨. ஆவிரையின்பெயர்—பகரி. (௧)

௨௮௬௩. வஞ்சியின்பெயர்—வானீரம், வஞ்சுளம். (௨)

௨௮௬௪. துத்தியின்பெயர்—கோளியம். (௧)

௨௮௬௫. ஆடாதோடையின்பெயர்—வாசை. (௧)

௨௮௬௬. சித்திரமூலத்தின்பெயர்—கொடிவேலி. (௧)

௨௮௬௭. தும்பையின்பெயர்—துரோணம். (௧)

௨௮௬௮. சுரையின்பெயர்—தும்பி, அலாபு. (௨)

௨௮௬௯. மரலின்பெயர்—அரலை. (௧)

௨௮௭௦. கற்றாழையின்பெயர்—குமரி. (௧)

௨௮௭௧. நாயுருவியின்பெயர்—கரமஞ்சரி. (௧)

௨௮௭௨. கொழிஞ்சியின்பெயர்—கோளி. (௧)

௨௮௭௩. ஊமத்தையின்பெயர்—உன்மத்தம். (௧)

௨௮௭௪. கஞ்சாவின்பெயர்—கஞ்சம், குல்லை. (௨)

௨௮௭௫. பொன்னூமத்தையின்பெயர்—மதமத்தை. (௧)

௨௮௭௬. நீலியின்பெயர்—அவுரி, பத்தியம். (௨)

௨௮௭௭. துழாயின்பெயர்—குல்லை, முடி, துளவம், வனம். (௪)

௨௮௭௮. மற்றுந்துழாயின்பெயர்—பிருந்தம். (௧)

௨௮௭௯. தூதுளையின்பெயர்—தூதுளம். (௧)

௨௮௮௦. வீழியின்பெயர்—விழுமி. (௧)

௨௮௮௧. காஞ்சொறியின்பெயர்—கண்டூதி. (௧)

௨௮௮௨. கிலுகிலுப்பையின்பெயர்—பகன்றை. (௧)

௨௮௮௩. தண்ணீர்க்குடத்தின்பெயர்—கானவாழை. (௧)

௨௮௮௪. பிரம்பின்பெயர்—சாதி, வேத்திரம், சூரல். (௩)

௨௮௮௫. கழற்கொடியின்பெயர்—கழங்கு, முழல், கர்ச்சூரம். (௩)

௨௮௮௬. கழற்காயின்பெயர்—முழல், கழங்கு. (௨)

௨௮௮௭. இண்டின்பெயர்—இண்டை, புலிதொடக்கி, ஈகை, ஈங்கை. (௪)

௨௮௮௮. சூரியின்பெயர்—விக்தம். (௧)

௨௮௮௯. புனற்றுளசியின்பெயர்—குல்லை. (௧)

௨அ௯௦. சிறுபூளையின்பெயர்—உழிஞைசிறுபூளை. (௨௪௧)

௨அ௯௧. பாற்சொற்றிச்செடியின்பெயர்—பாற்சொற்றிபாயசம். (௨௪௨)

௨அ௯௨. செங்காந்தளின்பெயர்—தோன்றி பற்றையிலாங்கலி செங்காந்தள. (௨௪௩)

௨அ௯௩. வெண்காந்தளின்பெயர்—கோடஞ்றோன்றி கோடை வெண்காந்தள. (௨௪௪)

௨அ௯௪. வெண்கிடையின்பெயர்—கோடல் வெண் கிடை பூசைவெருகாகும். (௨௪௫)

௨அ௯௫. காக்கணத்தின்பெயர்—கிகிணி கன்னி காக்கணங் கருவிளை.

௨அ௯௬. வெண்காவிளையின்பெயர்—உயவை வெண்காவிளை. (௨௪௭)

௨அ௯௭. தாளியின்பெயர்—மஞ்சிகந்தாளி. (௨௪அ)

௨அ௯அ. சிவேதையின்பெயர்—சிவேதை பகன்றை. (௨௪௯)

௨அ௯௯. குன்றியின்பெயர்—குஞ்சங்குன்றி. (௨௫௦)

௨௯௦௦. கொத்தான்பெயர்—நந்தைகொத்தான் (௨௫௧)

௨௯௦௧. சத்திக்கொடியின்பெயர்—தாடி மஞ்சஞ் சத்திக் கொடியே.()

௨௯௦௨. சாறணையின்பெயர்—திரிபுரி சாறடை சாறணையாகும். (௨௫௩)

௨௯௦௩. சீந்திற்கொடியின்பெயர்—அமுதவல்லி சீந்தில் சீவந்தி யாகும்.()

௨௯௦௪. பாலையின்பெயர்—பாலை சீவந்தி சீவனி யாகும். (௨௫௫)

௨௯௦௫. கூதாளியின்பெயர்—துடிகூ தாளங் கூதாளி யென்ப. (௨௫௬)

௨௯௦௬. கோவையின்பெயர்—விம்பமுந் தொண்டையுங் கொவ்வையுங்கோவை. (௨௫௭)

௨௯௦௭. சிலந்திக்கொடியின்பெயர்—தலைச்சுருள்வள்ளி சிலந்திக்கொடியே. (௨௫அ)

௨௯௦அ. வள்ளிக்கொடியின்பெயர்—வள்ளியிலதை வள்ளிக்கொடியே.()

௨௯௦௯. பிரண்டையின்பெயர்—வச்சிர வல்லி பிரண்டையாகும். (௨௬௦)

௨௯௧௦. இசங்கின்பெயர்—இசங்கு குண்டலி முத்தா பலமே. (௨௬௧)

௨௯௧௧. கக்கரியின்பெயர்—கக்கரிவாலுங்கி. (௨௬௨)

௨௯௧௨. செங்கிடையின்பெயர்—கந்தூரிசெங்கிடை. (௨௬௩)

௨௯௧௩. மற்றுஞ்செங்கிடையின்பெயர்—முதலையு மதன்பால் மொழியப்பெறுமே. (௨௬௪)

௨௯௧௪. முந்திரிகையின்பெயர்—மதுரசங்கோத்தனி முந்திரிகையாகும்.()

௨௯௧௫. முள்ளுடைமூலமெல்லாவற்றிற்கும்பெயர்—முண்டக முள்ளுடை மூலமென்ப. (௨௬௬)

உஅகூ0. சிறுபூளையின்பெயர்—உழிஞை. (க)
உஅகூக. பாற்சொற்றிச்செடியின்பெயர்—பாயசம். (க)
உஅகூஉ. செங்காந்தளின்பெயர்—தோன்றி, பற்றை, இலாங்கலி. (ங)

உஅகூங. வெண்காந்தளின்பெயர்—கோடல், தோன்றி, கோடை. (ங)

உஅகூச. வெண்கிடையின்பெயர்—கோடல். பூசை, வெருகு. (ஙு)

உஅகூரு. காக்கணத்தின்பெயர்—கிகிணி, கன்னி, கருவிளை. (ங)
உஅகூசு. வெண்காவிளையின்பெயர்—உயவை. (க)
உஅகூஎ. தாளியின்பெயர்—மஞ்சிகம். (க)
உஅகூஅ. சிவேதையின்பெயர்—பகன்றை. (க)
உஅகூகூ. குன்றியின்பெயர்—குஞ்சம். (க)
உகூ00. கொத்தான்பெயர்—நந்தை. (க)
உகூ0க. சந்திக்கொடியின்பெயர்—தாடிமஞ்சம். (க)
உகூ0உ. சாறணையின்பெயர்—திரிபுரி, சாறடை. (உ)
உகூ0ங. சீந்திற்கொடியின்பெயர்—அமுதவல்லி, சீவந்தி. (உ)
உகூ0ச. பாலையின்பெயர்—சீவந்தி, சீவனி. (உ)
உகூ0ரு. கூதாளியின்பெயர்—துடி, கூதாளம். (உ)
உகூ0சு. கோவையின்பெயர்—விம்பம், தொண்டை, கொவ்வை. (ங)

உகூ0எ. சிலந்திக்கொடியின்பெயர்—தலைச்சுருள்வள்ளி. (க)

உகூ0அ. வள்ளிக்கொடியின்பெயர்—வள்ளி, இலதை. (உ)
உகூ0கூ. பிரண்டையின்பெயர்—வச்சிரவல்லி. (க)
உகூக0. இசங்கின்பெயர்—குண்டலி, முத்தாபலம். (உ)
உகூகக. கக்கரியின்பெயர்—வாலுங்கி. (க)
உகூகஉ. செங்கிடையின்பெயர்—சந்தூரி. (க)
உகூகங. மற்றுஞ்செங்கிடையின்பெயர்—முசலை. (க)

உகூகச. முந்திரிகையின்பெயர்—மதுரசம், கோத்தனி. (உ)
உகூகரு. முள்ளுடைமூலமெல்லாவற்றிற்கும்பெயர்—முண்டகம். (க)

உ௧௧௬. இஞ்சியின்பெயர்—நல்ல மல்ல நறுமருப்பிஞ்சி. (உ௬எ)

உ௧௧எ. வழுதலையின்பெயர்—வழுதுணைவங்கம் பிருகதிவழுதலை. ()

உ௧௧அ. கையாந்தகரையின்பெயர்—கோகண மறுபதங் கையாந்தகரை.

உ௧௧௯. பொன்னுங்காணியின்பெயர்—சீதை பொன்னுங்காணியாகும்

உ௧உ0. சிறுகீரையின்பெயர்—சில்லிசாகினி மேகநாதஞ்சிறு கீரை. ()

உ௧உ௧. சேம்பின்பெயர்—சாகினி சேம்பு சகுடமாகும். (உஎஉ)

உ௧உஉ. வள்ளையின்பெயர்—நாளிகம்வள்ளை. (உஎ௩)

உ௧உ௩. பசிரியின்பெயர்—பசிரிபாவிரி. (உஎ௪)

உ௧உ௪. வெள்ளரியின்பெயர்—உருவாரம்வெள்ளரி. (உஎ௫)

உ௧உ௫. சிறுகிழங்கின்பெயர்—சுரசஞ்சிறுகிழங்கு. (உஎ௬)

உ௧உ௬. கருணைக்கிழங்கின்பெயர்—கந்தஞ் சூரணங் கருணைப்பெயரே.

உ௧உஎ. பாகலின்பெயர்—கார வல்லி கூலம் பாகல். (உஎஅ)

உ௧உஅ. பீர்க்கின்பெயர்—பீரம்பீர்க்கு. (உஎ௯)

உ௧உ௯. பெரும்பீர்க்கின்பெயர்—படலிகைபெரும்பீர்க்கு. (உஅ0)

உ௧௩0. கொடிக்கொத்தான்பெயர்—நூழில் கொடிக்கொத்தான். (உஅ௧)

உ௧௩௧. சுரையின்பெயர்—தும்பியுமலாபமுஞ் சுரையாகும்மே. (உஅஉ)

உ௧௩உ. பேய்ச்சுரையின்பெயர்—புற்கொடிபேய்ச்சுரை. (உஅ௩)

உ௧௩௩. கொடியின்வகைப்பெயர்—கோற்கொடி மென்கொடிகொடியென்றாகும். (உஅ௪)

உ௧௩௪. கொடியின்பெயர்—இலதை வல்லி நூழில் கொடிப்பெயர்.

உ௧௩௫. வெற்றிலையின்பெயர்—நாகவல்லி மெல்லிலை தாம்பூல மூலவல்லியிலைக்கொடிவெற்றிலை. (உஅ௬)

உ௧௩௬. மிளகின்பெயர்—கறியு மரீசியுங் காயமுங் கலினையுங் - கோளகமுந் திரங்கலு மிரியலுமிளகே. (உஅஎ)

உ௧௩எ. ஏலத்தின்பெயர்—இலாஞ்சி துடியே யேல மாகும். (உஅஅ)

உ௧௩அ மஞ்சளின்பெயர்—பீதங் காஞ்சனி நிசியரி சனமுட - னேது மரித்திராபமு மஞ்சட்குறுபெயர். (உஅ௯)

உ௧௩௯. வெண்கடுகின்பெயர்—அந்தில் கடிப்பகை யையவி சித்தார்த்தம் - வெண்சிறு கடுகென விளம்பலாகும். (உ௯0)

உ௧௪0. திப்பிலியின்பெயர்—பிப்பிலி காமன் [illegible] மே - மாகதி கலினி திப்பிலி யாகும். (உ௯௧)

உ௧௪௧. கொத்துமலியின்பெயர்—உருளரிசி கொத்துமலியென் றுரைப்பர். (உ௯உ)

உ௬௧௬. இஞ்சியின்பெயர்—நல்லம், அல்லம், நறுமருப்பு. (௩)

உ௬௧எ. வழுதலையின்பெயர்—வழுதுணை, வங்கம், பிருகதி. (௩)

உ௬௧அ. கையாந்தகரையின்பெயர்—கோகணம், அறுபதம். (௨)

உ௬௧௯. பொன்னாங்காணியின்பெயர்—சீதை. (௧)

உ௬௨0. சிறுகீரையின்பெயர்—சில்லி, சாகினி, மேகநாதம். (௩)

உ௬௨௧. சேம்பின்பெயர்—சாகினி, சகுடம். (௨)

உ௬௨௨. வள்ளையின்பெயர்—நாளிகம். (௧)

உ௬௨௩. பசிரியின்பெயர்—பாவிரி. (௧)

உ௬௨௪. வெள்ளரியின்பெயர்—உருவாரம் (௧)

உ௬௨௫. சிறுகிழங்கின்பெயர்—சுரசம். (௧)

உ௬௨௬. கருணைக்கிழங்கின்பெயர்—கந்தம், சூரணம். (௨)

உ௬௨எ. பாகலின்பெயர்—காரவல்லி, கூலம். (௨)

உ௬௨அ. பீர்க்கின்பெயர்—பீரம். (௧)

உ௬௨௯. பெரும்பீர்க்கின்பெயர்—படலிகை. (௧)

உ௬௩0. கொடிக்கொத்தான்பெயர்—தூழில். (௧)

உ௬௩௧. சுரையின்பெயர்—தும்பி, அலாபு. (௨)

உ௬௩௨. பேய்ச்சுரையின்பெயர்—புற்கொடி. (௧)

உ௬௩௩. கொடியின்வகைப்பெயர்—கோற்கொடி, மென்கொடி. (௨)

உ௬௩௪. கொடியின்பெயர்—இலதை, வல்லி, தூழில். (௩)

உ௬௩௫. வெற்றிலையின்பெயர்—நாகவல்லி, மெல்லிலை, தாம்பூலம், மூலவல்லி, இலைக்கொடி. (௫)

உ௬௩௬. மிளகின்பெயர்—கறி, மரிசி, காயம், கலினை, கோளகம், திரங்கல், மிரியல். (எ)

உ௬௩எ. ஏலத்தின்பெயர்—இலாஞ்சி, துடி. (௨)

உ௬௩அ. மஞ்சளின்பெயர்—பீதம், காஞ்சனி, நிசி, அரிசனம், அரித்திராபம். (௫)

உ௬௩௯. வெண்கடுகின்பெயர்—அந்தில், கடிப்பகை, ஐயவி, சித்தார்த்தம். (௪)

உ௬௪0. திப்பிலியின்பெயர்—பிப்பிலி, காமன், சிறுமூலகம், மாகதி, கலினி. (௫)

உ௬௪௧. கொத்துமலியின்பெயர்—உருளரிசி. (௧)

உ௬௪உ. வெண்காயத்தின்பெயர்—காய முள்ளி வெண்காய மாகும். ()

உ௬௪௩. வாசந்தருபலபண்டத்தின்பெயர்—தகரந்தக்கோலங்கோட்டஞ் சாதிக்கா, யிலவங்க மேலங் கச்சோல மாஞ்சி, பகரும்வா சந்தரும் பண்டப் பெயரே. (உ௬௪)

உ௬௪௪. மல்லிகையின்பெயர்—மாலதி யநங்கம் பூருண்டி மல்லிகை.

உ௬௪௫. வனமல்லிகையின்பெயர்—மௌவ லென்பது வனமல் லிகையே. (உ௬௬)

உ௬௪௬. இருவாட்சியின்பெயர்—மயிலை யநங்க மிருவாட்சி. (உ௬௭)

உ௬௪௭. சாதிப்பூவின்பெயர்—கருமுகை பித்திகை சாதியாகும். (உ௬௮)

உ௬௪௮. முல்லையின்பெயர்—தளவமுல்லை சாதி பிச்சி. (உ௬௯)

உ௬௪௯. ஊசிமுல்லையின்பெயர்—தளவுமாகதிநை திகை யூசிமுல்லை. () (௩00)

உ௬௫0. கொடிமல்லிகையின்பெயர்—விசலிகை யென்ப கொடிமல் லிகையே. (௩0௧)

உ௬௫௧. நந்தியாவர்த்தத்தின்பெயர்—வலம்புரி நந்தியா வர்த்தமாகும்.

உ௬௫உ. மருக்கொழுந்தின்பெயர்—தமனக மருக்கொழுந்து. (௩0௩)

உ௬௫௩. மலைப்பச்சையின்பெயர்—குளவிமலைப்பச்சை. (௩0௪)

உ௬௫௪. அடம்பின்பெயர்—அடம்புபாலிகை. (௩0௫)

உ௬௫௫. வெட்டிவேரின்பெயர்—முடிவாழைவெட்டிவேர். (௩0௬)

உ௬௫௬. துவரையின்பெயர்—ஆடகிதுவரை. (௩0௭)

உ௬௫௭. அவரையின்பெயர்—அவரைசிக்கடி. (௩0௮)

உ௬௫௮. உழுந்தின்பெயர்—மாடமுழுந்து. (௩0௯)

உ௬௫௯. கடலையின்பெயர்—மஞ்சூரங்கடலை. (௩௧0)

உ௬௬0. காராமணியின்பெயர்—காரா மணியிதை கூலமு மாகும். (௩௧௧)

உ௬௬௧. பசும்பயற்றின்பெயர்—பாசி முற்கம் பசும்பய றாகும். (௩௧உ)

உ௬௬உ. கொள்ளின்பெயர்—காணங் குலுத்தங் கொள்ளெனக் கருது வர். (௩௧௩)

உ௬௬௩. துவரைஅவரைமுதலியவற்றின்பெயர்— இனையவை முதிரை யென்னவு மாகும். (௩௧௪)

உ௬௬௪. சோளத்தின்பெயர்—சொன்னலு மிறுங்குஞ் சோளமாகும். ()

உ௬௬௫. வரகின்பெயர்—மருவுகோத்திரவம் வரகெனலாகும், (௩௧௬)

உ௬௬௬. கருந்தினையின்பெயர்—இறடியுங் கங்குங் கருந்தினையென்ப.()

உ௬௬௭. செந்தினையின்பெயர்—கம்புங்கவலையுஞ்செந்தினை யென்ப ()

உ௬௬௮. பைந்தினையின்பெயர்—ஏனல்குரலுவளை பைந்தினை யென்ப.()

உ௬௪உ. வெண்காயத்தின்பெயர்—காயம், உள்ளி. (உ)

உ௬௪௩. வாசந்தருபலபண்டத்தின்பெயர்—தகரம், தக்கோலம், கோட்டம், சாதிக்காய், இலவங்கம், ஏலம், கச்சோலம், மாஞ்சி. (அ)

உ௬௪௪. மல்லிகையின்பெயர்—மாலதி, அநங்கம், பூருண்டி. (௩)

உ௬௪௫. வனமல்லிகையின்பெயர் மௌவல். (௧)

உ௬௪௬. இருவாட்சியின்பெயர்—மயிலை, அநங்கம். (உ)

உ௬௪௭. சாதிப்பூவின்பெயர்—கருமுகை, பித்திகை. (உ)

உ௬௪அ. முல்லையின்பெயர்—தளவம், சாதி, பிச்சி. (௩)

உ௬௪௯. ஊசிமுல்லையின்பெயர்—தளவு, மாகதி, நைதிகை. (௩)

உ௬௫௦. கொடிமல்லிகையின்பெயர்—விசலிகை. (௧)

உ௬௫௧. நந்தியாவர்த்தத்தின்பெயர்—வலம்புரி. (௧)

உ௬௫உ. மருக்கொழுந்தின்பெயர்—தமனகம். (௧)

உ௬௫௩. மலைப்பச்சையின்பெயர்—குளவி. (௧)

உ௬௫௪. அடம்பின்பெயர்—பாலிகை. (௧)

உ௬௫௫. வெட்டிவேரின்பெயர்—முடிவாழை. (௧)

உ௬௫௬. துவரையின்பெயர்—ஆடகி. (௧)

உ௬௫௭. அவரையின்பெயர்—சிக்கடி. (௧)

உ௬௫அ. உழுந்தின்பெயர்—மாடம். (௧)

உ௬௫௯. கடலையின்பெயர்—மஞ்சூரம். (௧)

உ௬௬௦. காராமணியின்பெயர்—இதை, கூலம். (௧)

உ௬௬௧. பசும்பயற்றின்பெயர்—பாசி, முற்கம். (௧)

உ௬௬உ. கொள்ளின்பெயர்—காணம், குலுத்தம். (உ)

உ௬௬௩. துவரையவரையின்முதலியவற்றின்பெயர்—முதிரை. (௧)

உ௬௬௪. சோளத்தின்பெயர்—சொன்னல், இறுங்கு. (உ)

உ௬௬௫. வரகின்பெயர்—கோத்திரவம். (௧)

உ௬௬௬. கருந்தினையின்பெயர்—இறடி, கங்கு. (உ)

உ௬௬௭. செந்தினையின்பெயர்—கம்பு, கவலை. (உ)

உ௬௬அ. பைந்தினையின்பெயர்—ஏனல், குரல், நுவணை. (௩)

௨௬௬௯. தினைத்தாளின்பெயர்—அருவி தினைத்தாளிருவியு மாகும். ()

௨௬௭௦. எள்ளின்பெயர்—எண்ணுந் திலமு நூவுமெள்ளாகும். (௯௨௧)

௨௬௭௧. இளையெள்ளின்பெயர்—குமிகை யிளையெள். (௯௨௨)

௨௬௭௨. எள்ளிளங்காயின்பெயர்—கவ்வையெள்ளிளங்காயாகும்மே. ()

௨௬௭௩. நெல்லின்பெயர்—சொல்லும் விரீகியும் வரியுஞ் சாலியும்-ய வமு நெல்லின்பொதுப்பெயராகும். (௯௨௪)

௨௬௭௪. குளநெல்லின்பெயர்—நீர்வாரங்குள நெல்லாகும்மே. (௯௨௫)

௨௬௭௫. மலைச்சாரல்விளைநெல்லின்பெயர்—ஐவன மலைச்சாரல்விளைநெ ல்லாகும். (௯௨௬)

௨௬௭௬. செஞ்சாலியின்பெயர்—செந்நெனன்னெல் செஞ்சாலிப் பெயர்.

௨௬௭௭. பயிரின்பெயர்—பயிரே பசும்புல் பைங்கூழாகும். (௯௨௮)

௨௬௭௮. பதரின்பெயர்—பதடிபதரே பொல்லு மாகும். (௯௨௯)

௨௬௭௯. இளஞ்சூலின்பெயர்—இளஞ்சூல்பீட்டை. (௯௩௦)

௨௬௮௦. இளங்கதிரின்பெயர்—பீளிளங்கதிரே. (௯௩௧)

௨௬௮௧. கதிரின்பெயர்—எனலுங் குரலுங் கொழுங்கதிரென்ப. (௯௩௨)

௨௬௮௨. கோதுமையின்பெயர்—கோதிகோதுமை. (௯௩௩)

௨௬௮௩. தோரைநெல்லின்பெயர்—இயவை தோரை. (௯௩௪)

௨௬௮௪. போரின்பெயர்—போர் சும்மை சூடும் போர்ப்பு மாகும். (௯௩௫)

௨௬௮௫. தூற்றுநெற்சூட்டின்பெயர்—பொலி பொங்கழி தூற்று நெற்சூ டாகும். (௯௩௬)

௨௬௮௬. வைக்கோலின்பெயர்—வையே பலாலம் வழுது வைக்கோலே.

௨௬௮௭. நெல்லினாற்றின்பெயர்—நாறுநெல்லி னாற்றாகும்மே. (௯௩௮)

௨௬௮௮. விழலின்பெயர்—விழலே விரணம் விளம்புங்காலே. (௯௩௯)

௨௬௮௯. வேயரிசியின்பெயர்—வேரல்வேயரிசி தோரையுமாகும். (௯௪௦)

௨௬௯௦. தருப்பையின்பெயர்—குசை குமுதங் கூர்ச்சங்கு முதந்தருப் பை. (௯௪௧)

௨௬௯௧. நாணலின்பெயர்—கானசரமே காமவேழம்-நவையில்சரவண நாகு ணற்பெயரே. (௯௪௨)

௨௬௯௨. மற்றுநாணலின்பெயர்—சிவேதை காசை நாணலெனச்செப்பு வர். (௯௪௩)

௨௬௯௩. கொறுக்கையின்பெயர்—எருவை வேழங் கொறுக்கை கொறு க்கச்சி. (௯௪௪)

௨௬௯௪. திரட்கோரையின்பெயர்—எருவைசாய் பஞ்சாய் திரட்கோரை யென்ப. (௯௪௫)

உ௬௬௯. தினைத்தாளின்பெயர்—அருவி, இருவி. (௨)
உ௬௭0. எள்ளின்பெயர்—எண், திலம், நூவு. (௩)
உ௬௭௧. இளையெள்ளின்பெயர்—குமிகை. (௧)
உ௬௭௨. எள்ளிளங்காயின்பெயர்—கவ்வை. (௧)
உ௬௭௩. நெல்லின்பெயர்—சொல், விரீகி, வரி, சாலி, யவம். (௫)

உ௬௭௪. குளநெல்லின்பெயர்—நீர்வாரம். (௧)
உ௬௭௫. மலைச்சாரல்விளைநெல்லின்பெயர்—ஐவனம். (௧)

உ௬௭௬. செஞ்சாலியின்பெயர்—செந்நெல், நன்னெல். (௨)
உ௬௭௭. பயிரின்பெயர்—பசும்புல், பைங்கூழ். (௨)
உ௬௭௮. பதரின்பெயர்—பதடி, பொல், (௨)
உ௬௭௯. இளஞ்சூலின்பெயர்—பீட்டை. (௧)
உ௬௮0. இளங்கதிரின்பெயர்—பீள். (௧)
உ௬௮௧. கதிரின்பெயர்—ஏனல், குரல், (௨)
உ௬௮௨. கோதுமையின்பெயர்—கோதி. (௧)
உ௬௮௩. தோரைநெல்லின்பெயர்—இயவை. (௧)
உ௬௮௪. போரின்பெயர்—சும்மை, சூடு, போர்ப்பு. (௩)
உ௬௮௫. தூற்றுநெற்சூட்டின்பெயர்—பொலி, பொங்கழி. (௨)

உ௬௮௬. வைக்கோலின்பெயர்—வை, பலாலம், வழுது. (௩)
உ௬௮௭. நெல்லினாற்றின்பெயர்—நாறு. (௧)
உ௬௮௮. விழலின்பெயர்—விரணம். (௧)
உ௬௮௯. வேயரிசியின்பெயர்—வேரல், தோரை. (௨)
உ௬௯0. தருப்பையின்பெயர்—குசை, குமுதம், கூர்ச்சம், குசம். (௪)

உ௬௯௧. நாணலின்பெயர்—கானசரம், காமவேழம், சரவணம். (௩)

உ௬௯௨. மற்றுநாணலின்பெயர்—சிவேதை, காசை, (௨)

உ௬௯௩. கொறுக்கையின்பெயர்—எருவை, வேழம், கொறுக்கச்சி. (௩)

உ௬௯௪. திரட்கோரையின்பெயர்—எருவை, சாய், பஞ்சாய். (௩)

உ௯௯௫. வாட்கோரையின்பெயர்—செருந்தி வாட்கோரையென்னச் செப்புவர். (௩௯௬)

உ௯௯௬. பச்சறுகின்பெயர்—பதமுந் தூர்வையும் பச்சறுகாகும். (௩௯௭)

உ௯௯௭. பசும்புல்லின்பெயர்—சட்பம் பசும்புல். (௩௯௮)

உ௯௯௮. உலர்ந்தபுல்லின்பெயர்—திரணமுலர்ந்தபுல். (௩௯௯)

உ௯௯௯. புற்பிடியின்பெயர்—காசைபுற்பிடி. (௩௫0)

௩000. இளம்புல்லின்பெயர்—இளம்புல்பதமே. (௩௫௧)

௩00௧. ஒருவகைப்புல்லின்பெயர்—புதவொருவிகற்பப்புல்லாகும்மே. ()

௩00௨. நீர்முள்ளியின்பெயர்—நீர்முள்ளி முண்டகம். (௩௫௩)

௩00௩. நீர்க்குளிரியின்பெயர்—கல்லார நீர்க்குளிரி. (௩௫௪)

௩00௪. கத்தூரிமஞ்சளின்பெயர்—சுவாங்கிகத்தூரி. (௩௫௫)

௩00௫. கிடையின்பெயர்—சடையே கிடையெனல். (௩௫௬)

௩00௬. பாசியின்பெயர்—நாரஞ் செவிரஞ் சடைச்சி சைவலம்-பாசியென்பர் பதியமுமாகும். (௩௫௭)

௩00௭. தாமரையின்பெயர்—அம்புய மம்போ ருகமர விந்தம் - பங்கயம் புண்ட ரீகம் பதுமம்-முண்டக நளின முளரி சரோருகஞ்-சதபத்திரிகோ கனதஞ் சலசம்- வனசங் கமலம் வாரிசங் கஞ்சந்-திருமால் கொப்பூழ்திருமலரிண்டை-பங்கேருகந் தாமரைப்பெயராகும். (௩௫௮)

௩00௮. தாமரைமலரின்பெயர்—இறும்பிரா சிவநறுந்தண்பூவே. (௩௫௯)

௩00௯. தாமரைக்கொட்டையின்பெயர்—பூவினுட் கொட்டை பொகுட்டே கன்னிகை. (௩௬0)

௩0௧0. தாமரைச்சுருளின்பெயர்—விசியும் வளையமுஞ் சுருளெனப் பேசுவர். (௩௬௧)

௩0௧௧. தாமரைக்காயின்பெயர்—வராடகம் வராண்டம் வண்காயாகும்.()

௩0௧௨. செங்குவளையின்பெயர்—அரத்தமுற்பல மாஞ்செங்குவளை. ()

௩0௧௩. மற்றும்செங்குவளையின்பெயர்—எருமணங் கல்லாரஞ் செங்கழுநீருமாமே. (௩௬௪)

௩0௧௪. கருங்குவளையின்பெயர்—பானல் கருங்குவளை. (௩௬௫)

௩0௧௫. மற்றுங்கருங்குவளையின்பெயர்—நீலமுற்பலம் நீலோற்பலமுமாம். (௩௬௬)

௩0௧௬. கருநெய்தலின்பெயர்—நீல மிந்தீ வரங்கரு நெய்தல். (௩௬௭)

௩0௧௭. மற்றுங்கருநெய்தலின்பெயர்—நீலோற்பலமும் நிகழ்த்தப் பெறுமே. (௩௬௮)

௨௯௫. வாட்கோரையின்பெயர்—செருந்தி (௧)

௨௯௬. பச்சறுகின்பெயர்—பதம்,தூர்வை. (௨)

௨௯௭. பசும்புல்லின்பெயர்—சட்பம். (௧)

௨௯௮. உலர்ந்தபுல்லின்பெயர்—திரணம். (௧)

௨௯௯. புற்பிடியின்பெயர்—காசை. (௧)

௩00. இளம்புல்லின்பெயர்—பதம். (௧)

௩0௧. ஒருவகைப்புல்லின்பெயர்—புதவு. (௧)

௩0௨. நீர்முள்ளியின்பெயர்—முண்டகம். (௧)

௩0௩. நீர்க்குளிரியின்பெயர்—கல்லாரம். (௧)

௩0௪. கத்தூரிமஞ்சளின்பெயர்—சுவாங்கி. (௧)

௩0௫. கிடையின்பெயர்—சடை. (௧)

௩0௬. பாசியின்பெயர்—நாரம், செவிரம், சடைச்சி, சைவலம், பதியம். (௫)

௩0௭. தாமரையின்பெயர்—அம்புயம், அம்போருகம், அரவிந்தம், பங்கயம், புண்டரீகம், பதுமம், முண்டகம், நளினம், முளரி, சரோருகம், சதபத்திரி, கோகனதம், சலசம், வனசம், கமலம், வாரிசம், கஞ்சம், திருமால்கொப்பூழ், திருமலர், இண்டை, பங்கேருகம். (௨௧)

௩0௮. தாமரைமலரின்பெயர்—இறும்பு, இராசீவம். (௨)

௩0௯. தாமரைக்கொட்டையின்பெயர்—பொகுட்டு, கன்னிகை. (௨)

௩௧0. தாமரைச்சுருளின்பெயர்—விசி, வளையம். (௨)

௩௧௧. தாமரைக்காயின்பெயர்—வராடகம், வராண்டம். (௨)

௩௧௨. செங்குவளையின்பெயர்—அரத்தம், உற்பலம். (௨)

௩௧௩. மற்றுஞ்செங்குவளையின்பெயர்—எருமணம், கல்லாரம், செங்கழுநீர். ஆ (௫)

௩௧௪. கருங்குவளையின்பெயர்—பானல். (௧)

௩௧௫. மற்றுங்கருங்குவளையின்பெயர்—நீலம், உற்பலம், நீலோற்பலம். ஆ (௪)

௩௧௬. கருநெய்தலின்பெயர்—நீலம், இந்தீவரம். (௨)

௩௧௭. மற்றுங்கருநெய்தலின்பெயர்—நீலோற்பலம். ஆ (௩)

௩0௪௮. வெண்ணெய்தலின்பெயர்—வெள்ளாம்பல் குமுதம
றநெய்தல். (௩௬௯)

௩0௪௯. செவ்வாம்பலின்பெயர்—சேதாம்பலரக்காம்பல் செவ்வாம்பல்செ
ங்குமுதம். (௩௭0)

௩0௨0. மற்றுஞ்செவ்வாம்பலின்பெயர்—செவ்வல்லி செவ்வாம்பல். ()

௩0௨௧. வெள்ளாம்பலின்பெயர்—அல்லி வெள்ளாம்பல் கைரவமாகும்.

௩0௨௨. மற்றும்வெள்ளாம்பலின்பெயர்—வெள்ளல்லி வெள்ளாம்பல்.()

௩0௨௩. குமுதவகைப்பெயர்—வெள்ளாம்பல் சேதாம்ப லென்றிரு விக
ற்பங் - கொள்ப மன்னோ குமுதப்பெயரே. (௩௭௪)

௩0௨௪. குமுதத்தின்பெயர்—ஆம்பலு நெய்தலு மல்லியுங் குமுதம். ()

௩0௨௫. செங்கழுநீரின்பெயர்—கல்லாரமுற்பலஞ் செங்கழுநீரே. (௩௭௬)

௩0௨௬. சிகைமாலையின்பெயர்—சிகழிகை படலிகை வாசிகை சிகை
மாலை- (௩௭௭)

௩0௨௭. மார்பிலணிமாலையின்பெயர்—மஞ்சரி யிலம்பக மார்பிலணி
மாலை. (௩௭௮)

௩0௨௮. தோளணிமாலையின்பெயர்—தொடைய ருமந் தோளணிமாலை.

௩0௨௯. கொண்டைமாலையின்பெயர்—கோதை தொங்கல் கொண்டை
மாலை. (௩௮0)

௩0௩0. மயிர்ச்சூட்டுமாலையின்பெயர்—வாசிகை யலங்கன் மயிர்ச்சூ
ட்டு மாலை. (௩௮௧)

## ஒன்பதாவது

### மரப்பெயர்வகை முற்றிற்று.

ஆக சூத்திரம் ௩0௩0.

---

௩0௧௮. வெண்ணெய்தலின்பெயர்—வெள்ளாம்பல், குமுதம். (௨)

௩0௧௯. செவ்வாம்பலின்பெயர்—சேதாம்பல், அரக்காம்பல், செங்குமுதம். (௩)

௩0௨0. மற்றுஞ்செவ்வாம்பலின்பெயர்—செவ்வல்லி. ஆ. (௪)

௩0௨௧. வெள்ளாம்பலின்பெயர்—அல்லி, கைரவம். (௨)

௩0௨௨. மற்றும்வெள்ளாம்பலின்பெயர்—வெள்ளல்லி. ஆ. (௩)

௩0௨௩. குமுதவகைப்பெயர்—வெள்ளாம்பல், சேதாம்பல். (௨)

௩0௨௪. குமுதத்தின்பெயர்—ஆம்பல், நெய்தல், அல்லி. (௩)

௩0௨௫. செங்கழுநீரின்பெயர்—கல்லாரம், உற்பலம். (௨)

௩0௨௬. சிகைமாலையின்பெயர்—சிகழிகை, படலிகை, வாசிகை. (௩)

௩0௨௭. மார்பிலணிமாலையின்பெயர்—மஞ்சரி, இலம்பகம். (௨)

௩0௨௮. தோளணிமாலையின்பெயர்—தொடையல், தாமம். (௨)

௩0௨௯. கொண்டைமாலையின்பெயர்—கோதை, தொங்கல். (௨)

௩0௩0. மயிர்ச்சூட்டுமாலையின்பெயர்—வாசிகை, அலங்கல். (௨)

ஒன்பதாவது

மரப்பெயர்வகை முற்றிற்று.

---

பத்தாவது

# ஒருசொற்பல்பொருள்வகை.

---

## முதலாவது அகரவருக்கம்.

௩௦௩௧. அகப்பா—புரிசையு முள்ளுயர் நிலமு மகப்பா. (௧)

௩௦௩௨. அகம்—மனமு முள்ளு மனையும் பாவமும் - புவியு மரப்பொதுப்பெயரு மகமே. (௨)

௩௦௩௩. அகலுள்—ஊரு நாடு மகலு ளாகும். (௩)

௩௦௩௪. அகி—அரவு மிரும்பு மகியென லாகும். (௪)

௩௦௩௫. அக்காரம்—ஆடையுஞ் சருக்கரையு மக்கார மாகும். (௫)

௨௦௩௬. அக்கு—வளைமணியேற்றின் முரிப்பிவை யக்கெனல். (௬)

௩௦௩௭. அங்கணம்—தூம்பு வாயிலு முன்றிலு மங்கணம். (௭)

௩௦௩௮. அங்கதம்—அரவு தோளணி வசையிவை யங்கதம. (௮)

௩௦௩௯. அங்கம்—யாக்கையு முறுப்புஞ் சயனமு மங்கம். (௯)

௩௦௪௦. அங்கி—அனலுஞ் சட்டையு மங்கி யாகும். (௧௦)

௩௦௪௧. அசனம்—பசியுங் கொழுப்பும் பகுதியு மளவும்-வேங்கைமரமுமுணவு மசனம். (௧௧)

௩௦௪௨. அச்சம்—அகத்தியும் பயமு மச்ச மாகும். (௧௨)

௩௦௪௩. அஞ்சலி—தொழுதலும் வாவற் பறவையு மஞ்சலி. (௧௩)

௩௦௪௪. அஞ்சனம்—காள நிறனு மையுந் திசைகளின்-யானையிலொன்றுமஞ்சன மாகும். (௧௪)

௩௦௪௫. அடல்—வலியுஞ் செருவு மடலென் றாகும். (௧௫)

௩௦௪௬. அடி—முதலுங் காலு மொறுத்தலு மடியெனல். (௧௬)

௩௦௪௭. அடுப்பு—தரும நாளு முத்தானமு மன்றி - யச்சப்பெயருமடுப்பென லாகும். (௧௭)

௩௦௪௮. அடை—இலையுங் கனமும் விலையும் வழியு - மப்பமுமற்றிவையடையென லாகும். (௧௮)

௩௦௪௯. அணங்கு—தெய்வமுந் தெய்வத் துவமைசொன் மாதரு-மையனேயும் வருத்தமுங் கொலையு-மழகு மாசையு மணங்கென்றுமே. (௧௯)

௩௦௫௦. அணி—படையின துறுப்பு மொப்பனையு மழகும் - பெருமையுங் கலனு மன்பு மணியெனல். (௨௦)

பத்தாவது

# பெயர்ப்பிரிவு

### அகரவருக்கம்.

௩௦௩௧. அகப்பா எ-து—மதில், மதிலுண்மேடை. (௨)

௩௦௩௨. அகம் எ-து—மனம், உள்வீடு, பாவம், பூமி, மரப்பொது. (௫)

௩௦௩௩. அகலுள் எ-து—ஊர், நாடு. (௨)

௩௦௩௪. அகி எ-து—பாம்பு, இரும்பு. (௨)

௩௦௩௫. அக்காரம் எ-து—புடைவை, சருக்கரை. (௨)

௩௦௩௬. அக்கு எ-து—சங்குமணி, எருத்துத்திமில். (௨)

௩௦௩௭. அங்கணம் எ-து—சலதாரை, முன்றில். (௨)

௩௦௩௮. அங்கதம் எ-து—பாம்பு, வாகுவலயம், வசைச்சொல். (௩)

௩௦௩௯. அங்கம் எ-து—உடல், அவயவம், கட்டில். (௩)

௩௦௪௦. அங்கி எ-து—நெருப்பு, சட்டை. (௨)

௩௦௪௧. அசனம் எ-து—பசி, கொழுப்பு, பகுதி, அளவு, வேங்கைமரம், உண்டி. (௬)

௩௦௪௨. அச்சம் எ-து—அகத்தி, பயம். (௨)

௩௦௪௩. அஞ்சலி எ-து—கும்பிடுதல், வாவல். (௨)

௩௦௪௪. அஞ்சனம் எ-து—கரியநிறம், மை, மேற்றிசையானை. (௩)

௩௦௪௫. அடல் எ-து—வலி, பொருதல். (௨)

௩௦௪௬. அடி எ-து—ஆதி, கால், தண்டித்தல். (௩)

௩௦௪௭. அடுப்பு எ-து—பரணிநாள், அடுப்பு, பயம். (௩)

௩௦௪௮. அடை எ-து—இலை, கனம், விலை, வழி, அப்பம். (௫)

௩௦௪௯. அணங்கு எ.து—தெய்வம், கொல்லியம்பாவையர், நோய், வருத்தம், கொலை, அழகு, ஆசை. (௭)

௩௦௫௦. அணி எ-து—படைவகுப்பு, அலங்காரம், அழகு, பெருமை, ஆபரணம், அன்பு. (௬)

௩0௫௧. அணு—உயிரு நுண்மையு மணுவென லாகும். (உ௧)

௩0௫௨. அணை—விடயமுஞ் சேதுவு மெத்தையுஞ் சயனமு-மணையென மொழிப வறிந் திசி னோரே. (உ௨)

௩0௫௩. அண்டசம்—அரவு தவளை முதலை யாமை-யானை யுடும்பு மீ ளோந்தியும் பறவையும் - பல்லியு மிப்பியு மண்டச மென்ப. (உ௩)

௩0௫௪. அண்டம்—அண்ட முட்டையு மாகா யமுமே. (உ௪)

௩0௫௫. அண்டர்—உயர்நிலையும்ப ரொன்னல ருடனே-இடைய ரண்ட ரென்ன லாகும். (உ௫)

௩0௫௬. அத்தம்—ஒருநாண் மீனு மொள்ளிய பொன்னு - மருநெறியுங் கண்ணடியும் பாதியுங்—கரமும் பகர்சொற் பொருளு மத்தம. (உ௬)

௩0௫௭. அத்தி—யானையு மொருமரப் பெயரு மென்பு-மார்கவிப்பெயரு மத்தியென் றாகும். (உ௭)

௩0௫௮. அத்து—அரைப்பட் டிகையுந் துன்னமு மசைச்சொலுஞ்-செந் நிறமும்மிவை தெரியிலத் தென்ப. (உ௮)

௩0௫௯. அத்தை—அசைநிலைச் சொல்லுங் குருவு மத்தை. (உ௯)

௩0௬0. அந்தம்—அழகு மீறு மந்த மென்ப. (௩0)

௩0௬௧. அந்தரம்—அந்தரமேகந் தனியாகாயம் - இறுதி திமிரங் கூட்ட மாகும். (௩௧)

௩0௬௨. அந்தரி—அம்பிகைப் பெயருந் துர்க்கையு மந்தரி. (௩௨)

௩0௬௩. அந்தி—பாலையாழ்த் திறத் தோரிசைப் பெயரு-மாலைக்காலமு மற்றிவை யந்தி. (௩௩)

௩0௬௪. அபரம்—நரகமும் பொய்யும் பிறகு மபரம். (௩௪)

௩0௬௫. அமரர்—அடையலர் பெயருந் தேவரு மமரர். (௩௫)

௩0௬௬. அமலம்—அமல மழுக்கின்மையு மறிவு மழகும். (௩௬)

௩0௬௭. அமுதம்—சுவைபா னீர்மை சோறு தெய்வ - வுணவு நீர்மோ க்க முப்பு மமுதம். (௩௭)

௩0௬௮. அமை—அமை அழகு மூங்கிலு மமைவு மமையே. (௩௮)

௩0௬௯. அம்பணம்—அளவை காராம்பி கதலி யம்பணம். (௩௯)

௩0௭0. அம்பரம்—அம்பரங் கடலுமா டையுமா காயமும் (௪0)

௩0௭௧. அம்பல்—சிலரறிந்து புறங்கூறலும் பழிமொழியு மம்பல். (௪௧)

௩0௭௨. அம்மை—அழகும் வருபிறப்புந் தாயு மம்மை. (௪௨)

௩0௭௩. அயம்—அயமென் கிளவி யாடு மிரும்புங் - குளமு நீருங் குதிரையுங் கூறுவர். (௪௩)

௩௦௫௧. அணு எ-து—உயிர், நுண்மை. (௨)

௩௦௫௨. அணை எ-து—புணர்ச்சி, செய்கரை, மெத்தை, படுக்கை (௪)

௩௦௫௩. அண்டசம் எ-து—பாம்பு, தவளை, முதலை, ஆமை, யானை, உடும்பு, மீன், ஓந்தி, பறவை, பல்லி, இப்பி. (௧௧)

௩௦௫௪. அண்டம் எ-து—முட்டை, ஆகாயம். (௨)

௩௦௫௫. அண்டர் எ-து—தேவர், பகைஞர், இடையர். (௩)

௩௦௫௬. அத்தம் எ-து—ஓர்நட்சத்திரம், பொன், அருநெறி, கண்ணாடி, பாதி, கை, சொற்பொருள். (௭)

௩௦௫௭. அத்தி எ-து—யானை, ஓர்மரம், எலும்பு, கடல். (௪)

௩௦௫௮. அத்து எ-து—அரைப்பட்டிகை, தைப்பு, அசைச்சொல், செவப்பு. (௪)

௩௦௫௯. அத்தை எ-து—முன்னிலையசைச்சொல், குரு. (௨)

௩௦௬௦. அந்தம் எ-து—அழகு, கடை. (௨)

௩௦௬௧. அந்தரம் எ-து—தனிமை, தேவராலயம், ஆகாயம், முடிவு, இருள், கூட்டம். (௬)

௩௦௬௨. அந்தரி எ-து—பார்ப்பதி, துர்க்கை. (௨)

௩௦௬௩. அந்தி எ-து—பாலையாழ்த்திறத்திலொன்று. மாலைக்காலம். (௨)

௩௦௬௪. அபரம் எ-து—நரகம், பொய், பிற்பக்கம். (௩)

௩௦௬௫. அமரர் எது—பகைவர், தேவர். (௨)

௩௦௬௬. அமலம் எ-து—அழுக்கின்மை, அறிவு, அழகு. (௩)

௩௦௬௭. அமுதம் எ-து—சுவை, பால், குணம், சோறு, தெய்வவுணவு, நீர், மோட்சம், உப்பு. (௮)

௩௦௬௮. அமை எ-து—அழகு, மூங்கில், அமைவு. (௩)

௩௦௬௯. அம்பணம் எ-து—அளவை, மரக்கால், வாழை. (௩)

௩௦௭௦. அம்பரம் எ-து—கடல், சீலை, ஆகாயம். (௩)

௩௦௭௧. அம்பல் எ-து—சிலரறிந்துபுறங்கூறல், பழிமொழி. (௨)

௩௦௭௨. அம்மை எ-து—அழகு, வருபிறப்பு, தாய். (௩)

௩௦௭௩. அயம் எ-து—ஆடு, இரும்பு, குளம், நீர், குதிரை. (௫)

௩௦எ௪. அயிராவதம்—அயிராவதந்திசை யானையி லொன்றும்-புரந்தரன் யானைப் பெயரும் புகலும். (௪௪)

௩௦எ௫. அயில்—வேலுங் கூர்மையு மயிலென விளம்புவர். (௪௫)

௩௦எ௬. அரணம்—காடு மெயிலுங் கவசமு மரணம். (௪௬)

௩௦எஎ. அரண்—காவல் வேல் காவற் காடிவை யரணே. (௪எ)

௩௦எஅ. அரத்தம்—கடம்புஞ் சுடுவனுங் கழுநீர்ப் பெயரு-மரக்குஞ் செந் நிறமு மரத்த மாகும். (௪அ)

௩௦எ௯. அரந்தை—குறிஞ்சியா ழிசையுந் துன்பமு மரந்தை. (௪௯)

௩௦அ௦. அரம்பை—அரம்பை தெய்வப்பெண் வாழையு மாகும். (௫௦)

௩௦அக. அரலை—கழலை வீசங் கற்குழை யரலை. (௫க)

௩௦அ௨. அரவம்—அரவநூ புரமும் பாம்பு மோசையுமாம். (௫௨)

௩௦அ௩. அரற்றல்—அழுகையு மொலித்தலு மரற்ற லென்ப. (௫௩)

௩௦அ௪. அராகம்—முடுகியல் செந்நிறம் பாலை யாழ்த்திற-மாடகந் தக்க ராக மராகம். (௫௪)

௩௦அ௫. அரி—கிண்கிணிப் பரலுங் கிளரொளியும் பன்றியு-மிந்தி ரனும் வண்டும் பாம்புங் குரங்குங்-குதிரையுங் கிளியுந் தவளையு மூங்கிலுந்-திகிரியு நிறமுஞ் சிங்கமுந் தேருஞ்-சயனமுங் கண்ணின் வரியுந் துயிலு-மியமனு நெருப்புங் காற்றும் புகையும்-பகையுஞ் சேகும் பறையு மதுவு-ம தியும் ஞாயிறும் பஞ்சா யுதனும்-பொள்ளலும் பௌவமும் பொன்னும் பசு மையும்-வளையு மைம்மையுஞ் செந்நெற் கதிருஞ்-சோலையும் படைக்கலப் பெயரும் விசியு-மரிசியும் வரியு மரியென லாகும். (௫௫)

௩௦அ௬. அரிட்டம்—காகமுங் கள்ளும் பிறவியின் குற்றமு-மரிட்ட மென்ப வறிந்திசி னோரே. (௫௬)

௩௦அஎ. அருணம்—ஆடு மானு மருண மென்ப. (௫எ)

௩௦அஅ. அருணன்—அருணனருக்கனு மவன்றேர்ப் பாகனும்-புதனு மென்னப் புகலப் பெறுமே. (௫அ)

௩௦அ௯. அருப்பம்—ஊர்ப்பொதுப்பெயரு மொருபெரும் பிணியு-மடவி யின் பெயரு மருப்ப மென்ப. (௫௯)

௩௦௯௦. அருவி—மலையின்வீழ் புனலுந் தினைத்தாளு மருவி. (௬௦)

௩௦௯க. அலகு—பலகறையு நுளம்பு மளவு மலகெனல். (௬க)

௩௦௯௨. அலங்கல்—பூவின் மாலையுந் தளிரு மசைவு-மிலங்கலு மொளிர்தலு மலங்க லாகும். (௬௨)

௩௦௯௩. அலரி—அலரி மலருந் தபனனு மழகுங்-கண்வரி யோர்மரம் என்மனார் புலவர். (௬௩)

௩௦௭௪. அயிராவதம் எ-து—கீழ்த்திசையானை, இந்திரன்யானை. (௨)

௩௦௭௫. அயில் எ-து—வேல், கூர்மை. (௨)

௩௦௭௬. அரணம் எ-து—காடு, மதில், கவசம். (௩)

௩௦௭௭. அரண் எ-து—காவல், வேல், காவற்காடு. (௩)

௩௦௭௮. அரத்தம் எ-து—கடப்பமரம், உதிரம், செங்குவளை, அரக்கு, செவப்பு. (௫)

௩௦௭௯. அரந்தை எ-து—குறிஞ்சியாழிசை, வருத்தம். (௨)

௩௦௮௦. அரம்பை எ-து—தெய்வப்பெண், வாழை. (௨)

௩௦௮௧. அரலை எ-து—கழலை, விதை, ஓர்கற்றுழை. (௩)

௩௦௮௨. அரவம் எ-து—காற்சிலம்பு, பாம்பு, ஒலி. (௩)

௩௦௮௩. அரற்றல் எ-து—அழுதல், ஒலித்தல். (௨)

௩௦௮௪. அராகம் எ-து—பாட்டினோருறுப்பு, செவப்பு, பாலையாழ்த்திறம், பொன், ஓர்பண். (௫)

௩௦௮௫. அரி எ-து—சுதங்கையின்பருக்கைக்கல், ஒளி, பன்றி, இந்திரன், வண்டு, பாம்பு, குரங்கு, குதிரை, கிளி, தவளை, மூங்கில், சக்கரம், நிறம், சிங்கம், தேர், படுக்கை, கண்வரி, நித்திரை, இயமன், நெருப்பு, காற்று, புகை, பகை, மரவயிரம், பறை. கள், சந்திரன், சூரியன், திருமால், உட்டொளை, கடல், பொன், பச்சை, மலை, தகட்டுவடிவு, நெற்கதிர், சோலை, ஆயுதப்பொது, கட்டிலின்விசி, அரிசி, வரி. (௪௧)

௩௦௮௬. அரிட்டம் எ-து—காக்கை, கள், பிறவிக்குற்றம். (௩)

௩௦௮௭. அருணம் எ-து—ஆடு, மான். (௨)

௩௦௮௮. அருணன் எ-து—சூரியன், சூரியன்றேர்ப்பாகன், புதன். (௩)

௩௦௮௯. அருப்பம் எ-து—ஊர்ப்பொது, ஓர்பிணி, காடு. (௩)

௩௦௯௦. அருவி எ-து—மலைச்சாரலாறு, தினைத்தாள். (௨)

௩௦௯௧. அலகு எ-து—பலகறை, கொதுகு, அளவு. (௩)

௩௦௯௨. அலங்கல் எ-து—பூமாலை, தளிர், அசைவு, இரங்குதல், ஒளிசெய்தல். (௫)

௩௦௯௩. அலரி எ-து—பூப்பொது, சூரியன், அழகு, கண்வரி, ஓர்மரம், (௫)

௩௦௯௪. அலர்—பழிமொழி யும்பல ரறிந்தலர் தூற்றலு - மலரு மகிழ்வு மலரென்றாகும். (௬௪)

௩௦௯௫. அலை—அலையே கொலையுந் திரையு மாகும். (௬௫)

௩௦௯௬. அல்—இரவு மிருளு மிவையல் லாகும். (௬௬)

௩௦௯௭. அல்கல்—அல்க லென்பது தங்கலு நாளும். (௬௭)

௩௦௯௮. அல்லி—வெண்ணிற வாம்பலுங் காயா மரமு - மகவித ழும் மிவை யல்லியென் றாகும். (௬௮)

௩௦௯௯. அவந்தி—கிளியு முஞ்சைப் பதியு மவந்தி. (௬௯)

௩௧௦௦. அவலை—காடுங் கடுப்பு மவலையின் கண்ண. (௭௦)

௩௧௦௧. அழனம்—அழலும் பிணமு மழன மென்ப. (௭௧)

௩௧௦௨. அழுக்காறு—பொறாமையு மனத்தழுக்கு மழுக்கா றென்ப.()

௩௧௦௩. அளகம்—அளகம் புனலு மயிரு மாகும். (௭௩)

௩௧௦௪. அளக்கர்—கடலும் புவியுங் கார்த்திகை நாளு - மளமுஞ் சேறு மளக்க ரென்ப. (௭௪)

௩௧௦௫, அளறு—நரகமுஞ் சேறு மளறென நவில்வர். (௭௫)

௩௧௦௬. அளி—அறுபதமு மன்புங் கள்ளு மளியெனல். (௭௬)

௩௧௦௭. அளித்தல்—கொடுத்தலுங்காத்தலுஞ் செறித்தலு மளித்தல். (௭௭)

௪௧௦௮. அளை—வளைதயிர் புற்று மளையா கும்மே. (௭௮)

௩௧௦௯. அறல்—அறுதியு மப்பு மறலென மொழிப. (௭௯)

௩௧௧௦. அறுவை—ஆடை சித்திரை நாளிவை யறுவை. (௮௦)

௩௧௧௧. அனந்தம்—அளவில் பொருளும் பொன்னு மனந்தம். (௮௧)

௩௧௧௨. அனந்தன்—நாலிரு தெய்வ வரவிலொன்றும் நான்முகனருக - ஞாதியரன்மால்-சேடனநந்தனென் றிசி னோரே. (௮௨)

௩௧௧௩. அனலி—தினகரன் பெயருந்தீப்பெயரு மனலி. (௮௩)

௩௧௧௪. அன்றில்—அசுர நாளுமோர் பறவையு மன்றில். (௮௪)

௩௧௧௫. அன்னம்—அடிசிலு மெகினமு மன்னமாகும். (௮௫)

௩௧௧௬. அன்னை—தாயு முன்பிறந் தாளுமன்னை. (௮௬)

௩௧௧௭. ஆகம்—யாக்கையு மார்பு மாகமென்றுரைப்பர். (௮௭)

௩௧௧௮. ஆகாரம்—அசனமுநெய்யும் படிவமு மாகாரம். (௮௮)

௩௧௧௯. ஆகு—எலியும் பெருச்சாளியு மாகு வாகும். (௮௯)

௩௧௨௦. ஆகுலம்—வருத்தமுஞ் சத்த வொலியு மாகுலம். (௯௦)

௩௧௨௧. ஆக்கம்—ஆக்கஞ் செல்வ முந் திருமகளு மாகும். (௯௧)

௩௦௯௪. அலர் எ-து—பழிச்சொல், பலரறிந்து பழிதூற்றல், பூ, மகிழ்ச்சி. (௪)

௩௦௯௫. அலை எ-து—கொலை, திரை. (௨)

௩௦௯௬. அல் எ-து—இரவு, இருள். (௨)

௩௦௯௭. அல்கல் எ-து—தங்குதல், தினம். (௨)

௩௦௯௮. அல்லி எ-து—வெள்ளாம்பல், காயாமரம், அகவிதழ். (௩)

௩௦௯௯. அவந்தி எ-து—கிளி, ஓர்நகர். (௨)

௩௧௦௦. அவலை எ-து—காடு, கடுப்பு. (௨)

௩௧௦௧. அழனம் எ-து—நெருப்பு, பிணம். (௨)

௩௧௦௨. அழுக்காறு எ-து—பொறாமை, மனத்தழுக்கு. (௨)

௩௧௦௩. அளகம் எ-து—நீர், மயிர். (௨)

௩௧௦௪. அளக்கர் எ-து—கடல், பூமி, கார்த்திகைநாள், உப்பளம், சேறு, (௫)

௩௧௦௫. அளறு எ-து—நரகம், சேறு. (௨)

௩௧௦௬. அளி எ-து—வண்டு, அன்பு, கள். (௩)

௩௧௦௭ அளித்தல் எ-து—கொடுத்தல், காத்தல், செறித்தல். (௩)

௩௧௦௮. அளை எ-து—வளை, தயிர், புற்று. (௩)

௩௧௦௯. அறல் எ-து—அறுதல், நீர். (௨)

௩௧௧௦. அறுவை எ-து—சீலை, சித்திரைநட்சத்திரம். (௨)

௩௧௧௧. அனந்தம் எ-து—அளவின்மை, பொன். (௨)

௩௧௧௨. அனந்தன் எ-து—அட்டமாநாகத்தொன்று, பிரமன், அருகன், சிவன், திருமால், சேடன். (௬)

௩௧௧௩. அனலி எ-து—சூரியன், நெருப்பு. (௨)

௩௧௧௪. அன்றில் எ-து—மூலநட்சத்திரம், ஓர்பறவை. (௨)

௩௧௧௫. அன்னம் எ-து—சோறு, அன்னப்புள். (௨)

௩௧௧௬. அன்னை எ-து—தாய், அக்காள். (௨)

௩௧௧௭. ஆகம் எ-து—உடல், மார்பு. (௨)

௩௧௧௮. ஆகாரம் எ-து—போசனம், நெய், வடிவு. (௩)

௩௧௧௯. ஆகு எ-து—எலி, பெருச்சாளி. (௨)

௩௧௨௦. ஆகுலம் எ-து—வருத்தம், ஆரவாரம். (௨)

௩௧௨௧. ஆக்கம் எ-து—செல்வம், இலக்குமி. (௨)

௩௧௨௨. ஆசாரம்—ஆடையு மொழுக்கமு மருப்பெரு மழையு - மரசர்வாழ் கூடமு மாசார மாகும். (௯௨)

௩௧௨௩. ஆசினி—ஈரப் பலாமரச் சேகிவை யாசினி. (௯௩)

௩௧௨௪. ஆசு—மெய்புகு கருவியுஞ் சடுதியுங் குற்றமு-மற்பமு மோர்கவியு மாசென லாகும். (௯௪)

௩௧௨௫. ஆசை—ஆர்வமும் பொன்னுந் திசையு மாசை. (௯௫)

௩௧௨௬. ஆடல்—உரையுங் கூத்தும் வெற்றியு மாடல். (௯௬)

௩௧௨௭. ஆடவர்—ஆண்பெய ரிளையோ ரென்றிவ ராடவர். (௯௭)

௩௧௨௮. ஆடி—வாய்ந்த கண்ணாடியு மாதத் தொன்று - மாய்ந்தவுத் தராடமு மாடி யாகும். (௯௮)

௩௧௨௯. ஆடு—மேடமும் வெற்றியு மாடா கும்மே. (௯௯)

௩௧௩0. ஆணை—ஏவன் மெய்ப்பாடே விறல்செய றடுத்தல் - சூளுறவு மிலாஞ்சனையு மாணை யாகும். (௧00)

௩௧௩௧. ஆண்மை—வலியும் வென்றியும் வாய்மையு மாண்மை. (௧0௧)

௩௧௩௨. ஆதி—ஆதி பழமையு மரனு மாலு-முதலு நேரோட்டமு மொழியப் பெறுமே. (௧0௨)

௩௧௩௩. ஆம்பல்—இசையின் குழலுங் கள்ளு மூங்கிலு-மல்லியும்யானையு மாம்ப லாகும். (௧0௩)

௩௧௩௪. ஆரம்—சந்தன மணிவடந் தரளம் பதக்க-மாபரணப் பொதுவு மார மாகும். (௧0௪)

௩௧௩௫. ஆரல்—கார்த்திகை நாளு மொருமீன் பெயரு - மங்கா ரகனு மதிலு மாரல். (௧0௫)

௩௧௩௬. ஆரவாரம்—ஆகுலமுந் துக்கமு மாரவார மாகும். (௧0௬)

௩௧௩௭. ஆரை—புரிசைபுற் பாயோர் புதலு மாரை. (௧0௭)

௩௧௩௮. ஆர்—ஆர்வுங் கூர்மையு மாத்தியு மாரெனல். (௧0௮)

௩௧௩௯. மற்றும்ஆர்—தேராழி யகத்திற் செறியுறுப்பு மாகும். (௧0௯)

௩௧௪0. ஆர்தல்—அணிதலு நிறைதலு முண்டலு மார்தல். (௧௧0)

௩௧௪௧. ஆர்ப்பு—அமருஞ் சிரிப்பு மார்ப்பென லாகும். (௧௧௧)

௩௧௪௨. ஆர்வம்—ஆசையு நரகத் தொன்று மார்வம். (௧௧௨)

௩௧௪௩. ஆர்வலர்—காதலர் வேட்டோர் கனிந்தோ ரார்வலர். (௧௧௩)

௩௧௪௪. ஆலம்—பூவு நீரு மொருமரப் பெயரு - மாழ்கடல் விடமு மால மாகும். (௧௧௪)

௩௧௪௫. ஆலவன்—அம்புலிப் பெயரு மாசையு மாலவன். (௧௧௫)

௩௧௨௨. ஆசாரம் எ-து—சீலை, ஒழுக்கம், பெருமழை, அரசிருக்கை. (௪)

௩௧௨௩. ஆசினி எ-து—ஈரப்பலா, மரவயிரம். (௨)

௩௧௨௪. ஆசு எ-து—மெய்க்கவசம், சீக்கிரம், குற்றம், சிறுமை, ஓர்கவி. (௫)

௩௧௨௫. ஆசை எ-து—அன்பு, பொன், திசை. (௩)

௩௧௨௬. ஆடல் எ-து—சொல்லல், கூத்து, வெற்றி. (௩)

௩௧௨௭. ஆடவர் எ-து—ஆண்மக்கள், இளையோர். (௨)

௩௧௨௮. ஆடி எ-து—கண்ணாடி, ஓர்மாதம், உத்தராடநாள். (௩)

௩௧௨௯. ஆடு எ-து—மேடவிராசி, வெற்றி. (௨)

௩௧௩0. ஆணை எ-து—ஏவல், மெய், வெற்றிசெயல், தடுத்தல், சபதம், அடையாளம். (௬)

௩௧௩௧. ஆண்மை எ-து—வலிமை, வெற்றி, உண்மை. (௩)

௩௧௩௨. ஆதி எ-து—பழமை, சிவன், திருமால், முதல், நேரோட்டம். (௫)

௩௧௩௩. ஆம்பல் எ-து—இசைக்குழல், கள், மூங்கில், அல்லி, யானை. (௫)

௩௧௩௪. ஆரம் எ-து—சந்தனமரம், மணிவடம், முத்து, கண்டிகை, ஆபரணப்பொது. (௫)

௩௧௩௫. ஆரல் எ-து—கார்த்திகைநட்சத்திரம், ஆரான்மீன், செவ்வாய், மதில். (௪)

௩௧௩௬. ஆரவாரம் எ-து—ஒலி, வருத்தம். (௨)

௩௧௩௭. ஆரை எ-து—மதில், புற்பாய், ஓர்பூடு. (௩)

௩௧௩௮. ஆர் எ-து—நிறைதல், கூர்மை, ஆத்திமரம். (௩)

௩௧௩௯. மற்றும்ஆர் எ-து—தேர்ப்பண்டியகவாய். ஆ (௪)

௩௧௪0. ஆர்தல் எ-து—அணிதல், நிறைதல், புசித்தல். (௩)

௩௧௪௧. ஆர்ப்பு எ-து—போர், நகைப்பு. (௨)

௩௧௪௨. ஆர்வம் எ-து—ஆசை, ஓர்நரகம். (௨)

௩௧௪௩. ஆர்வலர் எ-து—நாயகர், மித்திரர், அன்புடையோர். (௩)

௩௧௪௪. ஆலம் எ-து—பூ, நீர், ஆலமரம், விடம். (௪)

௩௧௪௫. ஆலவன் எ-து—சந்திரன், ஆசை. (௨)

